*Kumaraṉ*

*Āram 19, muttu 7*

*October 02, 1941*

Record no. 313

REGD. NO. M. 1823. ராஜா சர் சாந்தி நினைவு மலர் KUMARAN WEEKLY.

சந்தா விபரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
இலங்கை ரூ. 6-0-0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு வருஷம் 1-க்கு ரூ. 7-0-0

# குமரன்

விளம்பரம்.

நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்ச் ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்தமானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கு எழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும் மாதப் பதிப்பும் சேர்ந்தது PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 19 | காரைக்குடி விஷு-ஞு புரட்டாசி-மீ 16-உ (2—10—41) | முத்து 7



செட்டிநாடு ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியாரவர்களும்
ராணி ஸ்ரீமதி சீதை ஆச்சி அவர்களும்

# ராஜா சர் சாந்தி

## கானாடுகாத்தானில் வைபவம்

## 3 லட்சத்துக்கு மேல் நன்கொடை

(நமது சொந்த நிருபர்)

நாளது புரட்டாசி மாதம் 12-ந் தேதி ஞாயிற்றுக்கிழமை, செட்டிநாட்டு ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களுக்கு அறுபதாவதாண்டு நிறைவு விழா, கானாடுகாத்தான் அரண்மனையில் மிக்க விசேஷமாக நடைபெற்றது. செட்டிமார் நாட்டிலுள்ள சகல வகுப்புப் பிரமுகர்களும், ராமநாதபுரம் ஜில்லா உத்யோகஸ்தர்கள் பெரும்பாலாரும், புதுக்கோட்டை, சிவகெங்கை சமஸ்தானப் பிரதம உத்யோகஸ்தர்களும், சென்னை போன்ற பிற இடங்களிலிருந்து முக்கியஸ்தர்கள் பலரும், ஏராளமாக வந்திருந்து வைபவத்தைச் சிறப்பித்தனர். நகரத்தார்கள் மட்டும் ஐயாயிரத்துக்கு மேல் வந்திருந்தனர். நகரத்தார் பெண்மணிகள் சுமார் மூவாயிரம் பேர்வரைப் பல இடங்களிலிருந்தும் வந்திருந்தது குறிப்பிடத்தக்கது. இந்த விழாவுக்கு வந்திருந்தோர், எல்லா வகுப்பினருமாகச் சுமார் 25,000 பேர் இருக்கும். வந்திருந்த அனைவரையும், செட்டிநாட்டரசரும், குமார ராஜா ஸர் முத்தையா செட்டியாரவர்களும் ஷையார் சகோதரர்களான சென்னை உபஷரீப் ராமநாதன் செட்டியார், சிதம்பரம் செட்டியார் ஆகியவர்களும், மிக்க உபசாரமாக வரவேற்றனர். அரண்மனை முகப்பில் சாந்தி விழாவன்று காலை 4 மணி முதல் மாலை வரையிலும் நின்று, வந்த பிரமுகர்களை யெல்லாம் வரவேற்ற காட்சியும் திறமையும் போற்றி வியக்கத்தக்கனவாகும். சாதாரணமாக வேறு எங்கும் நடைபெற முடியாத முறையில் இந்த வரவேற்புக்கு ராஜா குடும்பத்தாருடன் நின்று உபசரித்தவர்கள்காரைக்குடி ஸ்ரீமான் மு. ராம. பெரியணன் செட்டியார், ஸ்ரீமான் நா. கு. ராமநாதன் செட்டியார், பள்ளத்தூர் ஸ்ரீமான் வைரம் அருணாசலம் செட்டியார், தேவகோட்டை ஸ்ரீமான் உ. ராம. உ. மு. சுப. லெட்சுமணன் செட்டியார் கானாடுகாத்தான் ஸ்ரீமான், எம். ஆர். எம். ராமசாமிச் செட்டியார், காரைக்குடி ஸ்ரீமான் A. PL. அண்ணாமலைச் செட்டியார் முதலியோராவர். 11-ந் தேதி முதல் 13-ந் தேதி வரை மூன்று நாட்களும் இவ்வைபவம் ஒரு பெரிய திருவிழாவாகவே காட்சியளித்தது. ரயிலிலும் கார்களிலும், வண்டிகளிலும், கால்நடையாகவும் அயல் ஊர்களிலிருந்து நாலாபக்கமும் ஜனங்கள் கானாடுகாத்தானை நோக்கி வந்த வண்ணமாக இருந்தார்கள். சுமார் 700 கார்கள்வரை வந்திருந்தன. போக்குவரத்தை ஒழுங்குபடுத்துவதற்காக காரைக்குடி, சாக்கோட்டை, பள்ளத்தூர், செட்டிநாடு ஆகிய இடங்களிலிருந்து போலீஸார் வந்திருந்தனர். இவர்கள் தவிர, செட்டிநாடு, பள்ளத்தூர், கோட்டையூர், கொத்தமங்கலம், காரைக்குடி, தேவகோட்டை, கண்டனூர், ஆத்தங்குடி, பலவான்குடி, சிறுவயல், கீழச்சிவல்பட்டி ஆகிய பதினொரு ஊர்களிலிருந்து 13 சாரணர் படைகளைச் சேர்ந்த சுமார் 200 சாரணர் வந்து தொண்டாற்றினர். இவர்களுக்கு திரு. கு. மு. சித. முருகப்ப செட்டியார் வீட்டில் ஜாகை ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இவர்களுந் தவிர ராஜா சர் எஸ்டேட்டிலிருந்து சுமார் 1200 பேர், வந்தவர்கட்கு வசதி செய்து கொடுக்க அமர்த்தப்பட்டிருந்தனர். எல்லா வகுப்பினர்கட்கும் சாந்தி விழாவன்று தனித்தனி ஏற்பாட்டில் விசேஷமாக விருந்தளிக்கப்பட்டது.

செட்டிநாடு ரயில்வே ஸ்டேஷனில் இந்த விழாவுக்கு வந்தவர்கள் தங்குவதற்காகப் பெரிய கீத்துக்கொட்டகை போடப்பட்டிருந்தது. ரயிலில் இறங்குபவர்களை அவரவர் ஜாகைக்கு அழைத்துச் செல்ல ஸ்டேஷனில் சுமார் 20 கார்கள் வரைத் தயாரிலிருந்தன. செட்டிமார் நாட்டில் இது வரை இதுபோன்ற பெரிய வைபவம் எதுவும் நடந்ததாகச் சொல்லமுடியாது.

### கொட்டகைச் சிறப்பு

ராஜமாளிகையின் முன்புள்ள விசாலமான இடத்தில் ஆறு பெரிய கொட்டகைகள் ஒரே கொட்டகையாகத் தோன்றும்படி அவ்வளவு விஸ்தாரமாக, எஞ்சினீயரிங் முறைப்படி போடப்பட்டிருந்தன. இவற்றில் சங்கீதக் கச்சேரிக் கென்று மூன்று தனிக்கொட்டகைகள் சுமார் மூவாயிரம் பேர்வரை அமரத்தக்கனவாக அமைக்கப்பட்டு, நடுக்கொட்டகையில், வித்வான்கள் இருப்பதற்கு மேடை போடப்பட்டிருந்தது. பெண்கட்கு சுமார் 1000 பேர்வரை இருந்து கேட்கும்படி மேடைக்குப் பக்கத்தில் இடம் ஒதுக்கப்பட்டிருந்தது. கொட்டகையின் நாலுபாகங்களிலும் வெளியில் பல இடங்களிலும், அரண்மனையின் உள்ளே பல இடங்களிலும், இன்னிசைக் கச்சேரிகளைக் கேட்பதற்காக ஒலி பெருக்கிகள் அமைக்கப்பட்டிருந்தன. வித்வான்களின் எதிர்ப்புறத்தில் மிகப் பிரகாசம் பொருந்திய மின்சார விளக்குகள் வரிசையாக இருபக்கங்களிலும் வைக்கப்பட்டிருந்தன. பல ஆயிரக்கணக்கான மின்சார விளக்குகள் கொட்டகை முழுவதும் மூன்று நாளும் இரவு பகலாக ஜ்வலித்துக் கொண்டிருந்தன. அரண்மனை முகப்பில் மிக அழகாகக் கொட்டகைகள் சோடனை செய்யப்பட்டிருந்தன. எதிரேயுள்ள சிறிய பார்க்கில் உள்ள பூஞ்செடிகள் பலவர்ண எலக்டிரிக் பல்புகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது கண்ணுக்கினிய காட்சியளித்தது. வீதி முழுவதும் காவணம் போடப்பட்டிருந்தது. தாக சாந்திக்கு ஆங்காங்கே அழகிய தண்ணீர்ப் பந்தல்கள் அமைக்கப்பட்டு சோடா, கலர், மோர், சுத்தமான குடி தண்ணீர் முதலியன எல்லோருக்கும் வழங்கப்பட்டன.

### விருந்து வைபவம்—ஹரிஜனங்கட்கு

ஹரிஜனங்கள், வலையர் வகுப்பார்களுக்கு லேடி ஆஸ்பத்திரிக்கு அடுத்தாற்போலுள்ள கீழ்புறம் காலி இடத்தில் தனியாக 400X150 அளவில் 2 மட்டக்காவணமும், மழை வந்தால் உபயோகமாக இருக்கும்படி 40X80 அளவில் 2 கொட்டகைகளும், 60X100 அளவில் ஒரு சமையல் கொட்டகையும், 30X40 அளவில் ஒரு ஸ்டோரும் அமைக்கப்பட்டிருந்தன. இந்தக் காவணம், கொட்டகைகளில் மொத்தமாக ஒரு தடவைக்கு 1500 பேர்வரை அமர்ந்து சாப்பிட வசதியுண்டு. விழாவன்று மொத்தம் சுமார் 7000 பேர் வரைச் சாப்பிட்டனர். பள்ளத்தூர் திரு. சாமிநாதன் செட்டியார், கானாடுகாத்தான் திரு. கரு. கருப்பன் செட்டியார், தேவகோட்டை திரு. சேதுப்பிள்ளை, முனச்சந்தை திரு. அரிராம பிள்ளை முதலியவர்கள் நேரிலிருந்து தக்கபடி விசாரித்து அறுசுவை உண்டியளித்தனர்.

### நாட்டார்களுக்கு

ராஜமாளிகைக்கு எதிரேயுள்ள ஊருணி வடகரையில் உள்ள மடத்தில் பாலையப்பட்டி 18 கிராம நாட்டார்களுக்கும் விருந்தளிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. விழாவன்று சுமார் 1500 பேர்வரை விருந்துண்டார்கள். நகரத்தார் சாப்பாடு மாதிரி, காலை மாலைப் பலகாரத்துடன் எல்லா பதார்த்தங்களுடனும் விருந்தளிக்கப்பட்டது. விருந்துண்ட எல்லோருக்கும் பாக்கு, பழப்பெட்டி வகையராவும் கொடுக்கப்பட்டது இந்த சாந்தி விழாவில் ஒரு தனிச் சிறப்பாகும்.

காரைக்குடி திரு. சித. நா. ராம. நாராயணன் செட்டியாரவர்களும், ஆத்தங்குடி திரு. ராம. ஆ ராம. ஆறுமுகம் செட்டியாரவர்களும், திருவானைக்காவல் திரு. சி. சொ. சொக்கலிங்கம் செட்டியாரவர்களும் நேரிலிருந்து எல்லா ஏற்பாடுகளையும் செய்து நாட்டார் விருந்தை மிக உயரிய முறையில் நடத்திவைத்தார்கள்.

### நகரத்தார் விருந்து

நகரத்தார்களுக்கு, அரண்மனைக்கு அடுத்தாற்போல் தடவை யொன்றுக்கு 500 பேர் சாப்பிட 2 கொட்டகைகள் அமைக்கப்பட்டிருந்தன. இவை தவிர மு. ராம. வீட்டிலும், மு. சித. மு. வீட்டிலும், சா. அ. ராம. வீட்டிலும் நகர விருந்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. எல்லா இடங்களிலும் மிக்க விசேஷமான முறையில் அறுசுவை உண்டி அளிக்கப்பட்டது. இளையாற்றக்குடி பட்டணச்சாமி வகுப்பைச் சேர்ந்த புதுவயல், கானாடுகாத்தான், பள்ளத்தூர், பலவான்குடி, கல்லல், பட்டமங்கலம், சொக்கநாதபுரம், கருங்குளம், கீழச்சிவற்பட்டி, நடராஜபுரம், அழகாபுரி, காரைக்குடி, தேவகோட்டை, ராயவரம், அரிமளம், கல்லுப்பட்டி, தேனீபட்டி, நடியாபட்டி, ஆராவயல், புதுப்பட்டி, உலகன்பட்டி, வேந்தன்பட்டி, நாட்டரசன் கோட்டை, விராமதி, ஆவினிப்பட்டி, சிறுகூடல்பட்டி, வேகுபட்டி, கானையார் கோவில், கெய்க்குப்பை ஆகிய ஊர்களிலிருந்து சுமார் 500 நகரப் பிரமுகர்கள் வந்திருந்து நகர விருந்தைச் சரிவரக் கவனித்துச் சிறப்பாக நடத்திவைத்தனர்.

அரண்மனைக்குப் பின் கட்டிலும், கா. அ. பெ. பெத்தபெருமாள் செட்டியார் வீட்டிலும், சா. ராம. சித. ராமசாமி செட்டியார் வீட்டிலும் நகரப் பெண்மணிகட்கு விருந்தளிக்கத் தனியாக ஏற்பாடு செய்யப்பட்டு சிறப்பாக விருந்தளிக்கப்பட்டது.

### பிராமண போஜனம்

பஸ் ஸ்டாண்டுக்குச் சமீபத்திலுள்ள வி. வி. வி. டி. பங்களாவில் பிராமண போஜனத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. 11-ந் தேதி மாலை காபி, பலகாரமும், இரவு சாப்பாடும், 12-ந் தேதி மத்தியான்ம் சாப்பாடு விசேஷமான முறையிலும் பிராமண போஜனம் அளிக்கப்பட்டன. சுமார் 2,000 பேர்வரை சாப்பிட்டார்கள். அரிமளம் திரு. ஆரு. செல்லப்ப செட்டியார் அவர்கள் விசாரித்து வேண்டிய ஏற்பாடுகள் செய்தார்கள்.

### இதரர்கட்கு

உத்யோகஸ்தர்கட்கென்று மு. சித. பங்களாவில் சாப்பாடு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. செட்டிநாடு சௌத் இந்தியா கார்ப்பரேஷன் கட்டிடத்தில் இதர வகுப்பார்கள் எல்லோருக்கும், அங்கேயே முஸ்லிம்களுக்குத் தனியாகவும் போஜன ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஏழைப் பரதேசிகள் மற்று மிதரர்கள் 3000 பேர் வரைச் சாப்பிட்டார்கள்.

### சுகாதார ஏற்பாடுகள்.

அரண்மனைக்குச் செல்லும் ரோடுகள் எல்லாம் நன்கு சுத்தம் செய்யப்பட்டு, வண்டிகளுக்கும் கார்களுக்கும் வசதி செய்யப்பட்டிருந்தது. தேவகோட்டை முனிசிபல் தண்ணீர் லாரி ரோடுகளில் தண்ணீர் தெளித்ததுடன், சுத்தமான குடி தண்ணீரையும் சப்ளை செய்தது. காரைக்குடியிலிருந்தும் தேவகோட்டையிலிருந்தும் தனிப்பட்ட முறையில் சுமார் 115 தோட்டிகளும் 7 மேஸ்திரிகளும் சம்பளத்துக்கு ராஜா சாகிபால் ஸ்பெஷலாக அமர்த்தப்பட்டு, நகரைச் சுத்தம் செய்தார்கள். தேவகோட்டை முனிசிபாலிடியிலிருந்து ஒரு சானிட்டரி இன்ஸ்பெக்டரும், உள்ளூர் பஞ்சாயத்து போர்டு ஹெட் கிளார்க் திரு. டி எ. சுப்பிரமணிய ஐயரும் கூட இருந்து சுகாதார ஏற்பாடுகளை ஒழுங்குபெற நடத்தி வைத்தனர். ஆங்காங்கே கக்கூஸ்கள், யூரினல்கள் பல அமைக்கப்பட்டது வந்திருந்தோருக்கு வசதியாக இருந்தது. பிரமுகர்கள் தங்கியிருந்த தனிப்பட்ட ஜாகைகளிலும் வேண்டிய சுகாதார ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஆங்காங்கே சேகரிக்கப்படும் குப்பைகளை அப்புறப்படுத்த 7 குப்பை வண்டிகளும், 3 சாக்கடைத் தண்ணீர் வண்டிகளும், தேவகோட்டை முனிசிபல் குப்பை அள்ளும் லாரியும், கக்கூஸ் வண்டிகள் பலவும் வந்திருந்து சேவை செய்தன. குடி தண்ணீருக்கு தண்ணீர் லாரியுடன் 200 தண்ணீர் வண்டிகள் மூலமும் சுத்தமான தண்ணீர் கொண்டுவரப்பெற்று எல்லோருக்கும் சப்ளை செய்யப்பட்டது. உடனுக்குடன் அசுத்தங்கள் அப்புறப்படுத்தப்பட்டு அந்தந்த இடங்களில் பினாயில் போன்ற மருந்துகள் தெளிக்கப்பெற்று சுத்தம் செய்யப்பட்டது. சுமார் 25000 ஜனங்கள் வந்திருந்தும், ரோட்டில் எந்த விதமான அசுத்தமும் கிடையாது; அப்படி ஏதேனும் அசுத்தம் ஏற்பட்டாலும் அது உடனுக்குடன் அப்புறப்படுத்தப்பட்

(அடுத்த பக்கம் பார்க்க)

## 'பெருந்தன்மை மிக்க புருஷர்'

### செட்டிநாட்டு ராஜாவுக்கு ராஜாஜியின் பாராட்டு

ராஜா ஸர் அண்ணுமலைச் செட்டியாரின் உயரிய சேவையைப் பாராட்டி சென்னை மாஜி பிரதம மந்திரி ஸ்ரீமான் ஸி. ராஜகோபாலாச்சாரியார் மலருக்கு அனுப்பியுள்ள பாராட்டுச் செய்தியில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—

அரசியல் கொள்கையிலும், அனுஷ்டானத்திலும் அவருக்கும் எனக்குமிடையே பெரிய வித்தியாசங்களிருப்பினும், அவை அவரது மேலான நிறமையையும், உயரிய குணங்களையும் பாராட்டுவதற்குத் தடையாயிருக்கவில்லை. நமது தேசிய நிலைமை விபரீதமாக இல்லாமலும், நம்மீது சுமத்தப்பட்டிருக்கும் போராட்டங்கள் இல்லாமலுமிருக்குமாயின், நமது பொது வாழ்க்கையில் ஸர் அண்ணுமலைச் செட்டியார் மிகவும் வெற்றிகரமான தலைவராக இருந்திருக்கமுடியும் என்பதை யார்தான் சந்தேகிக்க இயலும்?

22 வருஷங்கட்கு முன்பு, அப்பொழுதுதான் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருந்த ஒத்துழையாமை உணர்ச்சியில் நான் ஈடுபட்டிருந்தபோது, முதன் முதலாக நான் அவரைச் சந்தித்தேன். ராஜாங்க சபைத் தேர்தல் சம்பந்தமாக என்னுடைய ஓட்டை அவர் கோரிய போது நான் அளித்த பதிலை அவர் பெருந்தன்மையுடன் ஏற்றுக்கொண்ட முறை என் மனதைக் கவர்ந்துவிட்டது இன்னும் என் ஞாபகத்திலிருக்கிறது. அதற்கப்பால் எத்தனையோ சம்பவங்கள் நிகழ்ந்திருப்பினும், அன்று ஏற்பட்ட மனக்கிளர்ச்சி இன்னும் மாறுமலே இருந்துவருகிறது.

பலதிறப்பட்ட அபிப்பிராயமுள்ளவர்களிடையே எவ்வாறு நடந்துகொள்ள வேண்டுமென்ற முறையை அவர் நன்கு உணர்ந்தவர். மிகுந்த தைரியத்துடன் நடந்துகொண்டாலும், மரியாதையும் அடக்கமும் காட்டத் தவறமாட்டார். மிகுந்த கண்ணியத்துடன் நடந்துகொள்வார். இது மிகவும் சிரமமான காரியம். இந்த ஷஷ்டியப்த பூர்த்தி தினத்தன்று இதர நண்பர்களுடன் சேர்ந்து நானும் அவரைப் பாராட்டுகிறேன். அவரிடம் காணப்படும் உயரிய குணங்கள் அத்தனையும், செட்டிநாட்டிலுள்ள யுவர்களிடம் செழிக்க வேண்டுமென்பதே எனது பிரார்த்தனை.

### மகாத்மாவின் வாழ்த்து

ஞாபகார்த்த மலருக்கு மகாத்மா காந்தி அளித்துள்ள வாழ்த்துச் செய்தி வருமாறு:—

செட்டிநாடு ராஜா சர் அண்ணுமலைச் செட்டியார் பல ஆண்டுகள் வாழ்ந்து மக்களுக்கு இன்னும் அதிகமான உதவிகளை அளிக்க நான் கடவுளை வணங்குகிறேன்.

### புதுக்கோட்டை மன்னரின் வாழ்த்து

புதுக்கோட்டை மகாராஜா அண்ணுமலை சர்வகலாசாலை வைஸ் சான்ஸலருக்கு அனுப்பியுள்ள செய்தியில் தென்னாட்டில் பெருமை பெற்ற அரும் பெரும் வள்ளலாகிய ராஜா ஸர் அண்ணுமலைச் செட்டியாருக்கு வாழ்த்து அனுப்பக் கடமைப்பட்டிருப்பதாயும், புதுக்கோட்டையிலுள்ள எண்ணற்றவர்களும், மற்ற நகரங்களிலுள்ள பல்லாயிரக்கணக்கான மக்களும் அடைந்துள்ள நன்மைகளால் அவரையும் அவரது புதிய சர்வகலாசாலையையும் போற்றின் அது மிகையாகாது தென்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

## காரைக்குடியில் சாந்தி வைபவம்

### விமரிசையான கொண்டாட்டம்

(முன் பக்கத் தொடர்ச்சி)

டது. இந்நாட்டில் இம்மாதிரி எந்த இடத்திலும் நடைபெற முடியாதென் பது நிச்சயம்.

சாந்தி விழா வைபவம்

12-ந்தேதி ஞாயிற்றுக்கிழமை அதிகாலை 4-30 மணி முதல் 8-30 மணி வரை வைதீகச் சடங்குகள் அரண்மனை உட்புறத்தில் அமைக்கப் பெற்றிருந்த அலங்கார எலெக்டிரிக் மண்டபத்தில் நடந்தேறின. ராஜா ஸாகிபும் ராணி சீதை ஆச்சியும் மணவறையில் வீற்றிருந்தனர். சிதம்பரம் ஸ்ரீ நடராஜ தேவஸ்தானத்திலிருந்தும், மதுரை ஸ்ரீ மீனுட்சி சுந்தரேஸ்வர தேவஸ்தானத்திலிருந்தும், இளையாற்றங்குடி முதலிய ஒன்பது நகரக் கோவில்களிலிருந்தும், இன்னும் நாட்டரசன்கோட்டை கண்ணுத்தாள் கோவில், சிவன்கோவில் முதலிய பல தேவஸ்தானங்களிலிருந்தும் மரியாதைகள் ராஜா சாகிபுக்கு அனுப்பப்பட்டிருந்தன. பாலையப்பட்டி 18 கிராம நாட்டார்களும் கோஷ்டி கோஷ்டியாக விருதுகளுடன் கொம்பு தம்பட்டங்கள் முழங்க வந்து ராஜா சாகிபுக்கு மரியாதை செலுத்தினர்கள். சுமார் 9-மணிக்கு வைதிகச் சடங்குகள் முடிந்த பின்னர் ராஜா தம்பதிகள் இருவரும் கைகூப்பிய வண்ணம் வெளியே வந்து எல்லோரையும் வரவேற்று உபசரித்துக்கொண்டே ஊர்வலமாகச் சிவன்கோவில் ஆலய தரிசனத்துக்குச் சென்றது கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. 10 மணிக்குத் திரும்பி வந்ததும், புலவர் பெருமக்களும், கவிவாணர்களும், மற்றும் பலரும் ராஜா சாகிபைப் பேட்டிகண்டு, தாங்கள் இயற்றியுள்ள வாழ்த்துப் பாமாலைகளையும், பாராட்டுகளையும், விசேஷ மலர் வெளியீடுகளையும் சமர்ப்பித்து மரியாதை செலுத்தினர்கள். சென்னை தமிழ்ப் புலவர் எம். என். முத்துக்குமாரசாமிப் பாவலர் தாம் இயற்றியுள்ள "தென்னுட்டு வள்ளல் ராஜா ஸர் அண்ணுமலை சரித்திரம்" என்ற நூலையும், 'இந்திரா' ஆசிரியர் திரு. ராம. பழனியப்ப செட்டியாரவர்கள் வெளியிட்டுள்ள 'சஷ்டியப்த பூர்த்தி சாந்தி விசேஷ மலர்' என்ற வெளியீட்டையும் சமர்ப்பித்தார்கள். தங்கம் வெள்ளி வேலைப்பாடு அமைந்த தந்த ஊன்றுகோல், தந்த வெள்ளிப் பேழை, வெள்ளித் தட்டு, கோப்பை வகையரா, வெள்ளியில் செய்யப்பெற்ற நடராஜ விக்ரகம், மிக அழகான ராமகிருஷ்ண விவேகானந்தர் படங்கள் முதலிய விலையுயர்ந்த, அரிய அற்புத வேலைப் பாடுகளமைந்த கணக்கற்ற சாமான்களும், ஜரிகை மாலைகளும் பல அன்பர்களால் ராஜா சாகிபுக்கு சன்மானங்களாக அளிக்கப்பட்டன. இவர்கள் அனைவருக்கும் ராஜா சாகேப் அவர்கள் தமது இதய பூர்வமான நன்றியைச் செலுத்தினர். பிற்பகல் 3 மணி முதல் இரவு வரை பல உத்யோகஸ்தர்களையும் பிரமுகர்களையும் ராஜா சாகிபு அவர்கள் வரவேற்று உபசரித்தார்கள்.

### 3½ லட்ச ரூ. நன்கொடை

வைதீகச் சடங்குகள் முடிந்ததும், ராஜா சாகேப் அவர்கள் பல ஸ்தாபனங்கட்குப் பரிசுகளும் நன்கொடைகளும் அளித்தார். மொத்தம் அவர்கள் அளித்துள்ள நன்கொடைகள் மூன்றரை லட்ச ரூபாய் என்று தெரிகிறது.

இந்த தருமங்களில், செட்டிநாட்டில் திருக்குளம், மடம், நந்தவனம், அக்கிரகாரம் முதலியவைகளோடு கூடிய ஒரு சிவ விஷ்ணு கோவிலை அமைக்கப் பொருள் அளித்திருப்பதும், அண்ணுமலைப் பல்கலைக் கழகம் தென்னிந்திய சங்கீதத்தை பரவச் செய்வதற்காக மீண்டும் ஓர் நன்கொடை அளித்திருப்பதும் முக்கியமானவையாகும். அப்பல்கலைக் கழகத்தில் மாணவ மாணவிகளுக்காக வாசகசாலைகள், ஆரம்பப் பாடசாலைக்காக ஒரு கட்டிடம், செட்டிநாட்டில் ராஜா அவர்களால் அமைக்கப்பெற்ற லேடி பெண்ட்லண்ட் ஸ்திரீகள் பாலர்கள் வைத்தியசாலை லேடி டாக்டர் வாசஸ்தலம், செட்டிநாடு சோஷல் கிளப், சாரணப்பையன்கள் சங்கம், அமராவதிபுதூர் மகளிர் இல்லம், அடையாறு ஔவை அனுதைக் குழந்தைகள் இல்லம், தாம்பரம் வள்ளுவர் குருகுலம், வாலாஜாபாத் இந்து மத வித்தியாசாலை ஆகிய இவைகளும் இன்னும் இவைபோன்ற பல ஸ்தாபனங்களும் சங்கங்களும் ராஜா அவர்கள் இப்போது அளித்துள்ள நன்கொடைகளால் நலமிகப் பெற்று விளங்கும்.

### சங்கீதக் கச்சேரிகள்

11-ந்தேதி சனிக்கிழமை மாலை 4-30 மணி முதல் 7-30 மணிவரை அகில இந்திய நாதசுர வித்வான் திருவாவடுதுறை டி. என். ராஜரத்னம் பிள்ளை அவர்களது நாதசுரக்கச்சேரி நடைபெற்றது. அவ்வமயம் ராஜா சாகிப் அவர்கள் கச்சேரிக்கு விஜயம் செய்திருந்தார். 7-30 மணி முதல் 8-30 மணிவரை தஞ்சை பாலகிருஷ்ணன் குமாரர்களது பியாண்டுக் கச்சேரி நடைபெற்றது. மறு நாள் அதிகாலை 5 மணி முதல் 7-30 மணி வரை (சாந்தி விழா நடந்த சமயம்) திருவிதாங்கூர் சமஸ்தான வித்வான் திருவிடைமருதூர் வீருசாமிப் பிள்ளை அவர்களது மேளக் கச்சேரி நடைபெற்றது. 7-30 முதல் 9 வரை மீண்டும் ஸ்ரீ டி. என். ராஜாத்தினம் பிள்ளையின் மேளக் கச்சேரி நடைபெற்றது. 9 முதல் 11-30மணி வரை பிரபல சினிமா நடிகர் திரு. எம். கே. தியாகராஜ பாகவதர் அவர்களது சங்கீதக்கச்சேரி தக்க பக்கவாத்தியங்களுடன் நடந்தது. பாகவதர் அவர்கள் முழுவதும் தமிழ்ப் பாட்டுக்களாகவே பாடியது மிகவும் குறிப்பிடத்தக்கது. கொட்டகையின் உள்ளும் வெளியிலும் ஏராளமான மக்கள்—ஆண்களும் பெண்களும் கூடியிருந்து ரசித்தனர். 12 மணி முதல் 1-30 மணி வரை சென்னை ஸ்ரீமதி பால சரஸ்வதியின் அபிநயக் கச்சேரியும், அதைத் தொடர்ந்து ஸ்ரீ முத்துக் குமாரசுவாமிப் பாவலர் அவர்களும் அவர்களது சிஷ்யச் சிறுமிகள் இருவரும் ராஜா ஸர் அவர்கள் மீது இயற்றிய கீர்த்தனைகளையும் கும்மி, கிளிக்கண்ணி முதலியவற்றையும் பாடினர்கள். அவ்வமயம் ராஜா ஸர் அவர்களும் கொட்டகையில் வீற்றிருந்தார். 2-30 முதல் 3-30 வரை ஸ்ரீ தியாகராஜ பாகவதரின் சகோதரர் ஸ்ரீ கோவிந்தராஜ பாகவதரின் பாட்டுக் கச்சேரியும், அதைத் தொடர்ந்து 5 மணி வரை சென்னை யுனைடெட் ஆர்டிஸ்ட்ஸ் கார்ப்பரேஷன் சங்கீதக் குழுவினரது இன்னிசைக் கச்சேரியும் நடைபெற்றன.

மாலை 3-30 முதல் 5-00 வரை ஸ்ரீ தண்டபாணி தேசிகரது கச்சேரியும், 6-00 வரை ஸ்ரீ யஸ். பி. வீரப்ப செட்டியாரின் சங்கீதக் கச்சேரியும், 6 முதல் 7 வரை ஸ்ரீ மாரியப்பசுவாமியின் கச்சேரியும், இரவு 7 முதல் 9 வரை ஸ்ரீ அரியக்குடி ராமானுஜ அய்யங்காரின் இன்னிசைக் கச்சேரியும், 9 முதல் 9-45 வரை சேலம் மாணவர் ஸ்ரீ தேசிகனது கச்சேரியும், 9-45 முதல் 10-30 வரை விகடம் விஜயேந்திர ராவின் விகடக் கச்சேரியும், 10-30 முதல் 12 வரை ஸ்ரீ வினைதீர்த்தான் செட்டியாரது கச்சேரியும் தக்க பக்கவாத்தியங்களுடன் நடைபெற்றன.

29உ காலை 8-30 முதல் 10-30 வரை ஸ்ரீமதி சரஸ்வதி பாயின் கதா காலட்சேபமும், 11-30 வரை குமாரி லலிதா பாயின் நாட்டியமும், 12-30 முதல் 2-30 வரை ஸ்ரீ சித்தூர் சுப்பிரமணிய பிள்ளையின் இன்னிசைக் கச்சேரியும் நடைபெற்றன.

### கவர்னரின் ஆசிச் செய்தி

இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் இலங்கை, செய்கோன் முதலிய பிற நாடுகளிலிருந்தும் பல பிரமுகர்கள் ராஜா தம்பதிகளை வாழ்த்தி ஏராளமான ஆசிச் செய்திகளை அனுப்பியிருந்தனர். வாழ்த்துச் செய்திகள் தந்தி மூலம் மட்டும் 200 க்கு மேல் வந்திருந்தன. சென்னை கவர்னர் மே. த. சர் ஆர்தர் ஹோப் சொந்த ஹோதாவில் அனுப்பிய வாழ்த்துரை வருமாறு:—

'ஷஷ்டி அப்தபூர்த்தியை யொட்டி தங்களுக்கு அளிப்பதற்காகத் தயாரிக்கப்பட்ட ஞாபகார்த்த மலருக்கு நான் ஏற்கனவே ஓர் செய்தி அனுப்பியிருக்கிறேன். என்றுலும் சொந்த முறையில் எனது பாராட்டுகளைத் தெரிவிக்க வேண்டுமென்று எண்ணி இதைத் தங்களுக்கு அனுப்புகிறேன். தென்னிந்தியாவில் தங்களைப்போல் கண்ணியமான முறையில் வாழ்க்கை நடத்தியவர் யாருமில்லை. பாத்திரமாகவுள்ள இயக்கங்களுக்குத் தாங்கள் எப்பொழுதும் உதவியிருக்கிறீர்கள். இம்மாகாணத்தில் ஐரோப்பியர்களுக்கும் இந்தியர்களுக்கும் நல்லுறவு இருக்கும்படி செய்ய தாங்கள் எப்பொழுதும் முயற்சி செய்து வந்திருக்கிறீர்கள். அண்ணுமலை சர்வகலாசாலையைத் தாங்கள் ஸ்தாபித்தீர்கள். இதில் தாங்கள் பெரிதும் பெருமை கொள்ளவேண்டும். பொது உணர்ச்சியுடன் கூடிய 2 புதல்வர்கள் தங்களுக்கு இருக்கிறார்கள். இதுவும் தங்களுக்கு திருப்திதரத்தக்க விஷயமாகும். தாங்கள் திடகாத்திரத்துடன் நீடூழி வாழ வேண்டுமெனப் பிரார்த்திக்கிறேன்"

## தமிழ்ப் பாட்டுப் போட்டி முடிவு

### வெற்றிபெற்றோர் விவரம்

செப்டம்பர் 22, 23, 24 தேதிகளில் அண்ணுமலை நகரில் நடைபெற்ற தமிழ்ப்பாட்டுப் போட்டியில் மொத்தம் 49 பேர் கலந்து கொண்டனர். அவர்களில் கீழ் வரும் நபர்கள் வெற்றிபெற்றதாக முடிவு செய்யப்பட்டு, உரிய பரிசுகள் 29உ நடைபெற்ற ஷஷ்டியப்த பூர்த்தி விழாக் கொண்டாட்டத்தில் ஸ்ரீமான் எம். ஆர். ஜெயகரால் வழங்கப் பெற்றன:—

பாட்டுக்களை இயற்றியவர்களில் (புருஷர்கள்) முதல் பரிசு:—திருவனந்தபுரம் ஸ்ரீ டி. லக்ஷ்மண பிள்ளை.

2-வது பரிசு:—கிவளூர் ஸ்ரீ மீனுக்ஷிசுந்தரம் பிள்ளை, ஸ்ரீ டி. ஆர். விஸ்வநாத சாஸ்திரி.

3-வது பரிசு:—ஸ்ரீ பாபநாசம் சிவன், பெங்களூர் ஸ்ரீ கிருஷ்ணமாச்சாரியார்.

பாடகர்கள் (ஸ்திரீகள்) முதல் பரிசு:—ஸ்ரீமதி அன்னபூரணியும், கமலாவும் (திருவனந்தபுரம்); திருநெல்வேலி ஸ்ரீ சரஸ்வதி.

2-வது பரிசு:—நெரூர் ஸ்ரீமதி ருக்மணியும், ரங்கநாயகியும் (சகோதரிகள்).

3-வது பரிசு:—சிதம்பரம் ஸ்ரீமதி கே. கோமதி, மயிலாப்பூர் ஸ்ரீமதி ஜானகி.

பாடகர்கள் (புருஷர்கள்) முதற் பரிசு:—ஸ்ரீ டி. எ. வெங்கிடாமய்யர் (வேப்பேரி); ஸ்ரீ கிட்டப்பா c/o பொன்னய்யா பிள்ளை (மதராஸ்).

2-வது பரிசு:—மதுரை ஸ்ரீ மாரியப்பஸ்வாமி.

3-வது பரிசு:—ஸ்ரீ டி. வி. லக்ஷ்மி நரசிம்ஹன், ஸ்ரீ ஆனை வைத்தினுதய்யர்.

பின்கண்ட பாடகர்களின் பெயர்கள் சிறப்பாகக் குறிப்பிடப்பட்டுள்ளன:—ஸ்ரீமான்கள்: சென்னை என். எஸ். அருணுசலய்யர், புதுக்கோட்டை உலகநாதம் பிள்ளை, சிதம்பரேஸ்வர தீக்ஷிதர், நடராஜ பாகவதர், டி. ஏ. வெங்கிடாசலம் பிள்ளை, எம். பி. பெரியஸ்வாமி அய்யர், சிதம்பரம் நடராஜசுந்தரம்பிள்ளை, சி. எஸ். ராஜப்பா வி. எஸ். சாகுல் ஹாமித் சாகிப்.

### ஸர். எஸ். ராதாகிருஷ்ணன்

ராஜா சர் சாந்தி ஞாபகார்த்த மலருக்கு கல்கத்தா சர்வ கலாசாலை உப அத்யக்ஷகர் ஸர் எஸ். ராதாகிருஷ்ணன் அனுப்பியுள்ள செய்தியில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—

இந்நாட்டில் ஒருவருடைய சொந்த முயற்சியாலேயே ஸ்தாபிக்கப்பட்ட சர்வகலாசாலை இவர்களுடையது ஒன்றே. பல வருடங்களாக அது மாணவர்களுக்கு மிகவும் உபயோகத்தை அளிக்கக்கூடிய முறையில் நடந்து வருகின்றது. ராஜா ஸர் அண்ணுமலைச் செட்டியாரவர்கள் இன்னும் அதிக ஊக்கத்துடன் தம்முடைய தொண்டை ஆற்றி வரவும், நீடூழி காலம் சுக வாழ்வு வாழவும் நான் பெரிதும் விரும்புகின்றேன்.

---



## அண்ணுமலை நகரில் கொண்டாட்டம்

### மகா கனம் எம். ஆர். ஜயகர் தலைமை

### வெள்ளிப் பேழையில் நினைவு மலர்

(நமது நிருபர்)

அண்ணுமலை யூனிவர்ஸிட்டியின் ஸ்தாபகரும், அதன் புரோ சான்ஸலருமான ராஜா ஸர் அண்ணுமலைச் செட்டியாரின் ஷஷ்டியப்த பூர்த்தி விழா செப்டம்பர் 28-ந் தேதி அண்ணுமலை நகரில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. 12-வது ஸ்தாபகர் தினக் கொண்டாட்டமும் இந்த விழாவும் ஒன்று சேர்ந்ததால், இவ்வைபவத்தை ஒரு பெரும் விழாவாகக் கொண்டாடுவதென்று சர்வகலாசாலை அதிகாரிகள் முடிவு செய்து பிரமுகர்களைக் கொண்டதொரு கமிட்டியை நியமித்தார்கள். சங்கீதக் கலாசாலை மாணவர்கள் செப்டம்பர் 25-ந் தேதி முதல் மூன்று நாள் சங்கீத மகாநாடு நடத்தினர். இதை டைகர் வரதாச்சாரியார் திறந்துவைத்தார் 27உ இரவு கலாசாலை மாணவர்களாலும் மீனுட்சி எலிமெண்டரி ஸ்கூல் பிள்ளைகளாலும் பல வித வேடிக்கை நிகழ்ச்சிகள் நடத்தப்பெற்றன. மாணவர்களது போட்டி விளையாட்டுகளும் நடந்தன.

28உ காலை திருவக்குளம் பாசுபதீஸ்வரர் ஆலயத்தில் கும்பாபிஷேகத்துடன் விழா ஆரம்பமானது. சிதம்பரம் சபாநாயகர், தில்லை கோவிந்தராஜா, மற்றும் நகரிலுள்ள எல்லாக் கோயில்களிலும் அபிஷேகம் நைவேத்யம் முதலியன சிறப்பாக நடைபெற்றன. மாலையில் சிதம்பரத்திலுள்ள ராஜா அண்ணுமலைச் செட்டியார் சத்திரத்திலும், டவுனிலுள்ள எல்லா மடங்களிலும் ஏழைகளுக்கு அன்னமளிக்கப்பட்டது.

பிற்பகல் சீனிவாச சாஸ்திரி ஹாலில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. அதற்கு மகா கனம் டாக்டர் யம். ஆர். ஜெயகர் தலைமை வகித்தார். ராஜாவைப் போற்றி, தமிழ், தெலுங்கு, கன்னடம், சமஸ்கிருதம், உருது ஆகிய பல மொழிகளில் வித்வான்களால் இயற்றப்பட்ட வாழ்த்துப்பாக்கள் பல படிக்கப்பட்டன. அதன் பின், சென்னை பப்ளிக் சர்வீஸ் கமிஷன் மெம்பரான ஸ்ரீ ம. ரெத்தினசாமி ஸ்தாபகர் தினப் பிரசங்கத்தை நிகழ்த்தினர். பிறகு தலைவர் பாட்டுப் போட்டிப் பரிசுகளையும், மற்ற பரிசுகளையும் வழங்கிவிட்டுத் தமது பிரசங்கத்தை நிகழ்த்தினர்.

### நினைவு மலர்

யூனிவர்ஸிட்டி ஸிண்டிகேட் நிறுவிய ஆசிரியர் கமிட்டி, ராஜா ஸர் அண்ணுமலைச் செட்டியார் ஷஷ்டியப்த பூர்த்தி ஞாபகார்த்த மலர் ஒன்றைத் தயாரித்திருந்தது. இக்கமிட்டிக்கு டாக்டர் பி. வி. நாராயணசாமி நாயுடு கன்வீனர். இம்மலர் சுமார் 1200 பக்கங்கள் கொண்டது. ராஜா அவர்களைப் பாராட்டியும், அவர்களது தர்மங்களைச் சிறப்பித்தும் சென்னை கவர்னர், மாஜி கவர்னர் எர்ஸ்கின் பிரபு, சுதேச மன்னர்கள், சமஷ்டிக் கோர்ட் நீதிபதிகள், வைஸ்ராய் நிர்வாக சபை மெம்பர்கள், ஹைகோர்ட் ஜட்ஜ்கள், சர்வ கலாசாலைகளின் உப அத்யட்சகர்கள், சமஸ்தான திவான்கள் முதலியவர்கள் அனுப்பிய ஆசிச் செய்திகள் சுமார் 85-ம் ராஜாவின் வாழ்க்கை வரலாறும் அண்ணுமலை யூனிவர்ஸிட்டியின் சரித்திரச் சுருக்கமும், பல போறிஞர்களது கட்டுரைகள் பலவும் இம்மலரில் அடங்கியுள்ளன. இம் மலரைப் புத்தகம் போன்று செய்த அழகிய வெள்ளிப் பேழையில் வைத்து டாக்டர் நாராயணசாமி நாயுடு, ஸ்தாபகரின் பிரதிநிதியாக இருந்த உப அத்யக்ஷகர் ஸர் கே. வி. ரெட்டி நாயுடுவிடம் அளித்தார். (இந்த நினைவு மலர் 29உ அண்ணுமலை யூனிவர்ஸிட்டியைச் சேர்ந்த ஸ்ரீ P. A. சுப்பிரமணிய ஐயரால் ராஜா ஸர் அண்ணுமலைச் செட்டியாரிடம் சேர்ப்பிக்கப்பட்டது.)

### பொதுக்கூட்டம்

யூனிவர்ஸிட்டி சீனிவாச சாஸ்திரி மண்டபத்தில் நடைபெற்ற பொதுக் கூட்டத்திற்கு சென்னையிலும் மற்றும் பல இடங்களிலுமிருந்து பிரமுகர்கள் பலர் வந்திருந்தனர். அண்ணுமலை நகர் மிக அழகாகச் சிங்காரிக்கப்பட்டிருந்தது.

வைஸ் சான்ஸலர் ஸர் கே வி. ரெட்டி அனைவரையும் வரவேற்றுப் பேசினர்.

இந்த யூனிவர்ஸிட்டி இந்தியாவின் கேம்பிரிட்ஜாக ஒரு நாள் புகழ்பெற வேண்டுமென்பது இதன் ஸ்தாபகரின் விருப்பம் என்று அவர் தெரிவித்தார்.

### புதிய கோடைகள்

பிறகு ராஜா ஸர் அவர்கள் யூனிவர்ஸிட்டியில் பல நற்காரியங்களை ஏற்படுத்தவும், தமிழ்ப் பாடல்களைப் பரவச் செய்யவும் புதிதாக ரூ 36,000 க்கு செக்குகள் அனுப்பியிருப்பதாக ஸர் கே. வி. ரெட்டி தெரிவித்தார். தமிழ் இசை வளர்ச்சிக்காக கனம் ராஜா அவர்கள் மேற்கொண்டு ரூ 15,000 நன்கொடை யளித்துள்ளார். யூனிவர்ஸிட்டி மாணவமாணவிகட்கு வாசகசாலை அமைக்க ரூ 15,000ம் யூனிவர்ஸிட்டிப் பூந்தோட்டத்தையும், கால்வாயையும் அபிவிருத்தி செய்ய ரூ 5000ம் அளித்துள்ளார். வருடந்தோறும் மகாகனம் யம் ஆர். ஜெயகர் பேரால் ஒரு பரிசு கொடுக்க ரூ. 1000ம் கொடுத்துள்ளார்.

பின்னர் பாராட்டுத் தந்திகளும் செய்திகளும் படிக்கப்பட்டன.

### சென்னை கவர்னர் பாராட்டு

வைபவத்தைப் பாராட்டி சென்னை கவர்னர் மே. த. சர் ஆர்தர் ஹோப் அனுப்பியுள்ள செய்தியில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருந்தார்:—

ராஜா அவர்கள் தமது தர்ம சிந்தனையைப் பல துறைகளிலும் விரிவாக வெளிப்படுத்தி யிருக்கிறார்கள். ஆனால், இவற்றிலெல்லாம் மேலாகத் தலைதூக்கி நிற்பது அவர்கள் அண்ணுமலை யுனிவர்ஸிட்டியை ஸ்தாபித்து, தென்னுட்டில் கல்வியை வளர்க்கக்கொடுத்த பெருங்கொடையாகும். இக் கொடைக்காக எதிர்கால மக்கள் அவரது பெயரை அன்புடனும் மரியாதையுடனும் ஞாபகப்படுத்தி வருவார்கள்.

### மாஜி கவர்னர் செய்தி

சென்னை மாஜி கவர்னர் எர்ஸ்கின் பிரபு அனுப்பியுள்ள செய்தியில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருந்தார்.—

ராஜா ஸர் அண்ணுமலைச் செட்டியார் கலைப் பண்புமீதும் கல்வி மீதும் கொண்டுள்ள அபிமானத்துக்கு என்றும் அழியாத ஞாபகச் சின்னமாக அண்ணுமலை யூனிவர்ஸிட்டி நிலைத்து நிற்கும். தென் இந்தியாவின் கல்வி நலத்துக்குப் பேருதவி செய்தவர்களில் முதன்மையானவர் என்ற முறையில் தமிழ்நாடு அவருக்கு என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது. அவர் இன்னும் பல்லாண்டு வாழவேண்டுமென்று விரும்புகிறேன்.

### கல்விக்குச் சேவை

பின்னர் ஸ்ரீ யம். ரத்னசாமி தமது பேருரையை நிகழ்த்தினர், அதில் அவர் குறிப்பிட்டது வருமாறு:—

தம் மக்களுக்கும் தம் நாட்டுக்கும் ராஜா ஸர் அண்ணுமலைச் செட்டியார் ஆற்றியுள்ள சேவைகளில், அவர் யூனிவர்ஸிட்டிக் கல்விக்குச் செய்துள்ள சேவை பெரிதும் போற்றத்தக்க தாகும். அவர் இதன் மூலம் இந்தியாவில் மட்டுமல்ல, உலகிலேயே உயர்தரக் கல்வியின் சரித்திரத்தில் குறிப்பிடத்தக்க பெருமையைப் பெற்றிருக்கிறார். ஒரு தனிகர் ஒரு யூனிவர்ஸிட்டியை ஸ்தாபித்தது இந்தியாவில் இது தான் முதல் தடவையாகும்.

### ஸ்ரீ ஜயகர் உரை

மகாகனம் ஜயகர், பரிசுகளை வழங்கிவிட்டுத் தமது தலைமை உரையை நிகழ்த்தினர்.

தமிழ், சமஸ்கிருதம், வடமொழி ஆகிய மூன்றையும் தொகுத்துப் படிக்கும்படி செய்திருப்பது குறிப்பிடத்தக்க தென்றும், ஒவ்வொரு இந்தியனும், ஆணும் பெண்ணும் சமஸ்கிருதத்தைப் படிக்க வேண்டியது அவசிய மென்றும், யூனிவர்ஸிட்டியில் சங்கீதத்துக்கு முக்கியஸ்தானம் அளித்தது மகிழ்ச்சி தரத்தக்க தென்றும், அது ஆரியர்களுக்கும், திராவிடர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் பொதுவான தென்றும், கலாசாரத்தில் இந்தியாவின் ஒற்றுமை உணர்ச்சியைக் காணவேண்டு மென்றால், அதை சங்கீதத்தின் மூலமாக உணர்வதைப் போல வேறு எதன்மூலமும் அவ்வளவு நன்கு அறிந்து கொள்ள முடியா தென்றும் அவர் குறிப்பிட்டார்.

சரித்திரப் பண்டிதர் ராவ்சாகிப் வி. எஸ் ஸ்ரீனிவாசாச்சாரியார் நன்றி கூறும்போது யூனிவர்ஸிட்டியின் ஸ்தாபகர் கல்விக்கு அளித்துள்ள கொடையைப் பெரிதும் சிலாகித்து அவரை "நவீன சோழர்" என்று பாராட்டினர்.

மாலை 6-மணிக்கு ஸ்ரீமதி எம். எஸ். சுப்பு லட்சுமியின் இசைக் கச்சேரி நடைபெற்றது. இரவு விருந்துடன் வைபவம் சிறப்பாக நிறைவேறியது.

### வேறு கொண்டாட்டங்களும் நன்கொடைகளும்

27-9-41 காலை 9 மணிக்குக் கழக உப தலைவர் பண்டித லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்களின் தலைமையின் கீழ் அண்ணுமலைப் பல்கலைக் கழக ஸ்தாபகரான கனம் செட்டிநாட்டு அரசர் ஸர் அண்ணுமலைச் செட்டியார் அவர்களின் அறுபதாவது ஆண்டு நிறைவுவிழா அண்ணுமலைப் பல்கலைக் கழக நகரத்தார் மாணவர் கழகத்தாரால் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பட்டது.

அவ்வமயம் தலைவர் அவர்கள் கனம் ராஜா அவர்களின் பெருமையைப் பற்றி மிக விரிவாகப் பேசிய பின்னர், கனம் ராஜா அவர்களின் மீது சங்கத்தின் சார்பாகப் பாடப்பட்ட வாழ்த்துப்பாவைச் சிதம்பரம், இராமசாமிச் செட்டியார் உயர்தரக் கலாசாலைத் தலைமைத் தமிழ் ஆசிரியர் வித்துவான் கா. மு. மாணிக்கஞ் செட்டியாரவர்கள் படித்தார்கள். பின்பு வித்துவான் வ. சுப. மாணிக்கம் அவர்களும் திரு. S. காசி அவர்களும் ராஜா அவர்களின் கொடைத்தன்மை, ஆற்றல், செல்வாக்கு ஆகியவைகளைப் பற்றிப் பேசினர்கள்.

பின்பு கீழ்க்கண்ட தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது:

"சங்கீதக் கச்சேரிகளில் எல்லாம் தமிழ்ப் பாட்டுக்களையே பாடச் செய்ய வேண்டுமென்றும், அங்ஙனம் பாட மறுப்பவர்களை கச்சேரிக்கு அழைக்கக் கூடாதென்றும், இக்கழகம் முடிவு செய்து இதனை நகரத்தார் வாழும் எல்லா ஊர்களுக்கும் அனுப்புவதெனத் தீர்மானிக்கிறது."

இறுதியாகத் தலைவரவர்களின் வாழ்த்துரைக்குப் பின் காரியதரிசி வந்தனம் கூற விழா இனிது நிறைவெய்தியது.

சிதம்பரம் ராமசாமிச் செட்டியார் டவுன் ஹைஸ்கூலில் 28உ மாலை 4-30 மணிக்கு பப்ளிக் பிராசிகூட்டர் ராவ்பகதூர் டி. ஆர். சக்ரபாணி ஐயங்கார் தலைமையின்கீழ் ராஜா ஸர் அண்ணுமலைச் செட்டியார் ஷஷ்டியப்த பூர்த்திக் கொண்டாட்டம் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. மாணவர்கள் "வேடிக்கைச் சங்கீத மகாநாடு" ஒன்றை நடத்திக் காண்பித்தனர். ஷஷ்டியப்த பூர்த்தியை முன்னிட்டு நடைபெற்ற பந்தய விளையாட்டுக்களில் வெற்றி பெற்றோர்களுக்குத் தலைவரால் பரிசுகள் வழங்கப்பட்டன. இப்பள்ளிக்கூடத்திற்குத் தமிழிலும் ஆங்கிலத்திலும் பரிசு கொடுப்பதற்காக ராஜா ஸர் 2000 ரூ. மூலதனமாகக் கொடுத்திருப்பதைத் தலைவர் தெரிவித்தார்.

அண்ணுமலை நகரிலிருக்கும் ஸ்ரீ மீனுட்சி எலிமெண்டரிப் பள்ளிக் கூடத்தில் 26உ காலை அண்ணுமலை சர்வகலாசாலை சரித்திரப் பேராசிரியர் ஸ்ரீ சீனிவாசாச்சாரியார் தலைமையில் ஷஷ்டியப்த பூர்த்தி விழா கொண்டாடப்பட்டது. மாணவ மாணவிகளுக்குத் தின்பண்டங்கள் வழங்கப்பட்டன. மேற்படி பள்ளிக் கூடத்திற்குக் கட்டிடம் கட்ட ராஜா ஸர் அவர்கள் செக் மூலம் 6000 ரூ. அனுப்பி யிருப்பதாகத் தலைவர் தெரிவித்தார்.

அன்று மாலை 4 மணிக்கு சிதம்பரம் நந்தனர் கல்விக் கழகத்தில் சுவாமி சகஜானந்தம் எம். எல். ஏ. தலைமையில் கொண்டாடப் பட்டது. ஸ்ரீ கே. தணிகாசலம் பிள்ளை ராஜா அவர்களைப் பாராட்டிப் பேசினர்.



## விசேஷ அறிவிப்பு

செட்டிநாடு "இந்திரா" பத்திரிகாலயத்தாரால் வெளியிடப்பட்ட ராஜா சர் அண்ணுமலையார் சாந்தி மலர் எல்லா பிரதிகளும் தீர்ந்துவிட்டன. கைவசமில்லை. அன்பர்கள் ஆர்டர்கள் செய்ய வேண்டாமென்று கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

மானேஜர்,
இந்திரா.

# தென்னாட்டு "வள்ளல்" ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார்

(ராவ்பகதூர் R. கிருஷ்ண ராவ் பான்ஸ்லே I. S. O.)

ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியாரின் சஷ்டியப்த பூர்த்தி விழாவை யொட்டி ஸ்ரீ R. கிருஷ்ணராவ் பான்ஸ்லே வெளியிட்டிருக்கும் அறிக்கையில், ராஜா ஸர் அவர்கட்கு "வள்ளல்" எனும் பட்டத்தை அறிஞர்கள் அளிக்க வேண்டுமென்று கோரியிருக்கிறார். அவர் தமது வேண்டுகோளில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—

★

ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் தமது 80-வது வயதையும் பூர்த்தி செய்து சதாபிஷேகம் கொண்டாடும்படி அவர் இன்னும் பல்லாண்டு வாழ வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன். அவர் அண்ணாமலை யூனிவர்ஸிட்டியின் ஸ்தாபகர்; கணக்கிலடங்காத தர்மங்களைச் செய்திருக்கிறார். சென்னை யூனிவர்ஸிட்டி அவருக்கு 'டாக்டர்' எனும் கவுரவப் பட்டத்தை வழங்கியிருக்கிறது. அவர் ஒரு நைட்; ஒரு ராஜா.

முஸ்லிம்களிலே, பெரிய தர்மவானான அப்துல் ஹகீம் சாகிபு பகதூருக்கு "நவாப்" என்ற பட்டம் வழங்கப்படுமுன், வட ஆர்க்காடு ஜில்லா போர்டு அவருக்கு "வள்ளல்" என்ற பட்டத்தையும் அளித்தது. இதற்குச் சென்னை சர்க்காரும் அனுமதி யளித்தனர். இந்த நூற்றாண்டில் முதன் முதல் இந்த அரிய சிறப்பைப் பெற்றவர் அவர் தான். தக்கார்க்குத் தக்க சமயத்தில் வரையாது வழங்கியவர்களை "வள்ளல்" என்று அழைப்பது தமிழர் மரபு. தமிழ் இலக்கியங்களில் முதல், இடை, கடை வள்ளல்கள் என மொத்தம் 21 வள்ளல்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றனர். முதல் எழு வள்ளல்களில் குமணன் குறிப்பிடத்தக்கவன். ஒரு பெரிய அறிஞன். கவிவாணர்களைப் பெரிதும் ஆதரித்து வந்தான். காடு துறந்து காட்டில் வாழ்ந்து கொண்டிருக்கும் பொழுது, தன்னிடம் வந்த புலவருக்குக் கொடுக்க ஒன்று மில்லாததால், தன் தலையையாவது தன் தம்பியிடம் கொடுத்து பரிசு பெறும்படி கோரினான். இடையெழுவள்ளல்களில் கர்ணன் மகாபாரத புருஷன். "கார்த்திகைக்கு மேலே மழையுமில்லை; கர்ணனுக்கு மேலே கொடையுமில்லை" யென்றொரு பழமொழி வழங்குகிறது. கடையெழுவள்ளல்களில் பாரியின் வள்ளற்றன்மையைச் சங்க நூற்கள் பெரிதும் பாராட்டுகின்றன. சேர சோழ பாண்டிய மன்னர்கள் மூவர் சேர்ந்தும் பாரி மன்னனைத் தோற்கடிக்க முடியாதபோது மூவரும் தமிழ்ப் புலவராக வேஷம்போட்டு அவனிடம் சென்றனராம். மன்னன் என்ன வேண்டுமென்று கேட்டபோது, பாரியே தங்கட்கு வேண்டுமென்று கேட்க; பாரியும் தன்னை ஏற்றுக்கொள்ளும்படி சொன்னானாம்.

தென்னிந்தியாவில், செட்டிநாட்டு ராஜாவுக்குக் கொடையிலும் புகழிலும் இணையானவர் வேறில்லை. இக்காலத்து வள்ளலாக அவர் விளங்குகிறார், எனவே சென்னையில் அறிஞர்கள் பலர் கூடி அவருக்கு 'வள்ளல்' எனும் பட்டத்தை அளிக்கும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

—

# தமிழ் இசைக்கு ரூ. 15,000

## செட்டிநாட்டு ராஜாவின் இரண்டாவது நன்கொடை

செட்டிநாட்டு ராஜா அவர்கள் தமிழ் இசை வளர்ச்சிக்கு இரண்டாவது முறையாக ரூ. 15,000 நன்கொடையளித்து, அண்ணாமலை பல்கலைக்கழக வைஸ் சான்ஸலர் அவர்களுக்கு எழுதிய கடிதம் வருமாறு:—

★

செட்டிநாடு, 24-9-41.

அண்ணாமலை நகர் சங்கீத மகாநாட்டின் நிகழ்ச்சிகளையும் தமிழ் நாட்டில் தமிழ் சங்கீதத்தை பிரபலப்படுத்துவதற்கு அம்மகாநாடு காட்டிய ஊக்கத்தையும் கவனித்து வந்தேன். நான் முதலில் அளித்த நன்கொடை குறிப்பிட்ட நோக்கம் பூர்த்தியாவதற்கு போதாது என்று நினைக்கிறேன். ஆகையால் நான் மனதில் கொண்டுள்ள எண்ணத்தைப் பூர்த்திசெய்ய உபயோகிக்கும்படி மீண்டும் ஓர் நன்கொடை அளிக்க விரும்பி ரூ 15000 க்கு ஒரு செக் அனுப்பியிருக்கிறேன். தமிழ் நாட்டில் சங்கீதக் கச்சேரிகளில் தமிழ் பாடல்கள் பிரதான ஸ்தானத்தை வகிக்க வேண்டுமென்பது என்னுடைய தீவிரமான எண்ணம். இந்த என்னுடைய எண்ணம் நிறைவேறுவதற்கு சங்கீதத்தில் பற்றுள்ள தனிப்பட்ட ஆண்பாலர், பெண்பாலர்கள் பலருடைய [illegible] மிக ஒத்துழைப்பையும், இப்போது உள்ளவையும் எதிர்காலத்தில் ஏற்படக்கூடியவையுமான சங்கீத சபைகளின் தீவிரமான ஒத்துழைப்பையும் பெறவேண்டியது அவசியமாகும். தமிழ்நாட்டில் பல இடங்களிலும் தமிழ் இசையை பிரபலப்படுத்துவதற்கு அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்யவேண்டும். சங்கீத வித்வான்கள் தாங்கள் நடத்தும் கச்சேரிகளில் தமிழ் பாடல்களுக்கு முக்கிய ஸ்தானம் கொடுக்கும்படி அவர்களுக்கு ஆதரவு அளிக்க வேண்டும். மேலே கூறியுள்ள என்னுடைய நோக்கத்தை நிறைவேற்றி வைக்க சிண்டிகேட் சபையார் உபயோகித்துக்கொள்ளும்படி இந்தத் தொகையைத் தங்களுக்கு அனுப்பியிருக்கிறேன். எனக்குத் தோன்றும் ஆலோசனைகளையும் மகிழ்ச்சியுடன் அப்போதைக்கப்போது தெரிவிக்கிறேன்.

—

## பர்மா—இந்தியர் தூதுகோஷ்டி: கனம் வாஜ்பேயருடன் பேட்டி

கனம் வாஜ்பேயரை தூது கோஷ்டியினர் சென்ற செப். 24-ந்தேதி கலந்து பேசினர். ஒப்பந்தத்திலுள்ள குறைகளும் அவர்கள் இந்திய சர்க்காருக்குச் சமர்ப்பித்த மகஜரில் (இந்த மகஜரின் சாரம் சென்ற ஆகஸ்டு 28-ந்தேதிய "குமரன்" இதழில் பிரசுரிக்கப்பட்டுள்ளது) தெளிவாக விளக்கியிருக்கும் விஷயங்களும் ஆலோசிக்கப்பட்டன. ஒப்பந்த நிபந்தனைகள் முன்கூட்டியே அட்ஹாக் கமிட்டி அங்கத்தினர்களுக்குத் தெரிந்திருந்தால் அவர்கள் சற்றும் தயங்காமல் இந்த ஒப்பந்தத்துக்கு இணங்க வேண்டாமென அப்போதே சொல்லியிருப்பார்கள் என்றும், பர்மியரின் நல்லெண்ணத்தைப் பெறுவதையே முக்கிய நோக்கமாகக்கொண்டு இந்த ஒப்பந்தம் தயாரிக்கப்பட்டுள்ளதால் இப்போது இந்தியாவிலும் பர்மாவிலுமுள்ள இந்தியரின் நல்லெண்ணத்தைப் பெறக்கூடிய திருத்தங்கள் செய்ய வேண்டியது அவசியமென்றும் தூது கோஷ்டியினர் எடுத்துரைத்தார்கள்.

—





# ராஜா ஸர் அவர்களின் சரித்திரச் சுருக்கம்

காரைக்குடி, தனவைசியர் மரபிலே மிகப் பழமையான பெருமை வாய்ந்த, பரம்பரைச் செல்வந்தர்கள் குடும்பத்திலே தோன்றிய ஸ்ரீமான் முத்தையா செட்டியாரவர்கட்கும், அவர்களது மனைவியார் ஸ்ரீமதி மீனாட்சி ஆச்சி அவர்களுக்கும் மூன்று புதல்வர்கள் பிறந்தார்கள். இவர்கள் முறையே சிதம்பரம் செட்டியார், இராமசாமிச் செட்டியார், அண்ணாமலை செட்டியாராகும்.

தந்தையார் ஸ்ரீமான் முத்தையா செட்டியாரவர்கள் சிதம்பரத்திலும், கரூரிலும், காசியிலும் பல தர்மங்களைச் செய்திருக்கிறார்கள். மூத்த சகோதரர் ஸ்ரீமான் இராமசாமிச் செட்டியாரவர்கள் சிதம்பரம் நகரவாசிகளின் நன்மைக்காகப் பல தர்மங்களைச் செய்திருக்கிறார். மேலும், அந் நகரில் ஒரு உயர்தரக் கலாசாலையையும் நிறுவினார்கள். அது இன்றும், ராமசாமிச் செட்டியார் உயர்தரக் கலாசாலை என்ற பெயருடன் சீரும் சிறப்பும் பெற்று மிளிர்கின்றது. இவர்களது உயரிய சேவையை மெச்சி அரசாங்கத்தார் "திவான் பகதூர்" எனும் பட்டத்தையும் அளித்துச் சிறப்பித்தார்கள்.

இவ்வளவு தர்ம சிந்தனை உடைய உயரிய குடும்பத்தில் அண்ணாமலைச் செட்டியாரவர்கள் சென்ற விஷு ஆண்டு புரட்டாசித் திங்கள் பதினாறும் நாள் (30-9-1881) பிறந்தார். இவர் இளமையிலேயே வர்த்தகத் துறையில் இறங்கிப் பெரும் பொருள் ஈட்டத் தொடங்கியதால், இன்று அத் துறையில் மிகச் சிறந்த நிபுணராக விளங்குகிறார்.

பள்ளத்தூரில் மிகவும் பிரபலம் வாய்ந்த ஸ்ரீமான் பழனியப்ப செட்டியாரின் புத்திரி ஸ்ரீமதி சீதை ஆச்சியை 1898-ம் ஆண்டில் மணந்தார். ஸ்ரீமதி சீதை ஆச்சி அவர்கள் சிறந்த குணநலங்கள் அமைந்தவர்.

ஸ்ரீமான் அண்ணாமலைச் செட்டியாரின் 18-வது வயதில் அவரது தந்தையார் காலமாகிவிட்டார். 1901-ம் ஆண்டில் இவர் தம் சகோதரர்களிடமிருந்து பாகம் பிரித்துக்கொண்டுத் தனியாகப் பல இடங்களிலும் வர்த்தக ஸ்தாபனங்களை நிறுவி நடத்த ஆரம்பித்தார். இவர்களது தொழில், வர்த்தக ஸ்தாபனங்கள், இந்தியாவில் மட்டுமின்றி, அயல்நாடுகளிலும் நூற்றுக் கணக்கில் பெருகி, சகல துறைகளிலும் வளர்ந்து செழித்து நிற்கின்றன.

வர்த்தகத் துறையில் ஈடுபடவாரம்பித்து சுமார் பத்து வருடங்கட்குப் பின்னர் அவர்கள் பொதுத் தொண்டில் கவனஞ் செலுத்தினார்கள். முதன் முதல் இவர்கள் பொதுச் சேவையில் ஈடுபட்டது காரைக்குடி யூனியன் சேர்மனாக இருந்துதான் என்று கூறலாம்.

1910-ல் இவர்கள் லண்டன் சென்று சுமார் 9 மாதங்கள் அங்கே தங்கியிருந்தார்கள். தனவணிகர்களில் முதன்முதல் மனைவியுடன் இங்கிலாந்து சென்ற பெருமை இவர்களைச் சேர்ந்ததாகும். அந்தக் காலத்திலேயே இவர்கள் பல அறப் பணிகளைச்செய்து தமது வள்ளற்றன்மையைப் பிறர் உணர்ந்து இன்புறும்படி செய்தார். அரசாங்கத்தாரும் 1913ல் இவர்களுக்கு "ராவ் பகதூர்" எனும் பட்டத்தை வழங்கித் தமது பாராட்டுதலைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

1916ல், அப்பொழுது சென்னை கவர்னராக இருந்த பெண்ட்லண்ட் துரை அவர்களால், காரைக்குடியில் லேடி பெண்ட்லண்ட் ஸ்திரீகள் குழந்தைகள் ஆஸ்பத்திரிக்கு அஸ்திவாரக்கல் நாட்டப்பெற்றது. ஸ்ரீமான் அண்ணாமலைச் செட்டியாரவர்கள் சுமார் மூன்று லட்ச ரூபாய் செலவிட்டு இந்த ஆஸ்பத்திரியைக் கட்டினார். 1925ல் இது, மற்றொரு சென்னை கவர்னர் கோஷன் பிரபுவால் திறந்து வைக்கப்பட்டது. செட்டிமார் நாட்டில் முதன் முதல் ஏற்பட்டது இந்த ஆஸ்பத்திரி தான்.

1921ம் ஆண்டில் ஸ்ரீமான் அண்ணாமலைச் செட்டியாரவர்கள் ஸ்டேட் கவுன்சிலின் தேர்தலுக்கு நின்று பெருமிதமான ஓட்டுகள் பெற்று வெற்றியடைந்தார்கள்.

சிதம்பரத்தில் தமது மூத்த சகோதரரால் ஏற்படுத்தப்பட்டுச் செவ்வனே நடைபெற்று வந்த உயர்தரக் கலாசாலையில், ஸ்ரீ மீனாக்ஷி கல்லூரியென ஒரு கல்லூரியை 1920ல் இவர்கள் ஸ்தாபித்தார்கள். இது பின்னர் திருவேட்களத்துக்கு மாற்றப்பட்டது. அங்கே பெருஞ் செலவில் கட்டிடம் கட்டப்பெற்று 1923ல் அது பூர்த்தியாயிற்று. 1922ல் சர்க்கார் இவர்கட்கு "திவான் பகதூர்" எனும் பட்டத்தைச் சூட்டி கௌரவித்தார்கள்.

ஒரே கல்லூரியாகத் திகழ்ந்த ஸ்ரீ மீனாக்ஷி கல்லூரியிலேயே. தமிழ் மொழிக்கென்றும், வடமொழிக்கென்றும் தனித்தனிக் கல்லூரிகளை அமைத்தார்கள். இவற்றோடு ஆசிரியர் பயிற்சிக்காக, பண்டிதர் பயிற்சிக் கல்லூரி யொன்றும் நிறுவப்பெற்றது. இவற்றிற் கெல்லாம் மொத்தம் 17 லட்ச ரூபாய் செலவேற்பட்டது. இத்தனை கல்லூரிகளையும் ஒன்று சேர்த்து ஒரு சர்வ கலாசாலை அமைக்க வேண்டுமென்று யோசித்தார்கள். இதற்கு மேற்கொண்டு 20 லட்ச ரூபாய் அளிக்க முன்வந்தார்கள். இந்த யோசனையைச் சர்க்கார் ஏற்றுக் கொள்ளவே, 1929ம் வருஷம் அண்ணாமலை யூனிவர்ஸிட்டியை ஸ்தாபிப்பதற்குரிய சர்க்கார் மசோதா ஒரே நாளில் ஏகமனதாகச் சட்டமாக, நிறைவேறியது. பண்டிதர் பயிற்சிக் கல்லூரியும் இசைக்கல்லூரியும் இத்துடன் இணைக்கப் பெற்றன.

1923-ம் வருஷத்திலேயே திவான் பகதூர் அண்ணாமலைச் செட்டியாரவர்களுக்கு 'ஸர்' பட்டம் வழங்கப் பட்டது. அண்ணாமலைப் பல் கலைக் கழகத்தை நிறுவ அவர்கள் அளித்த நிகரற்ற பெருங்கொடையைப் பாராட்டு முகத்தான் அரசாங்கத்தார் இவர்களுக்குப் பரம்பரை பாத்தியதையாக "ராஜா" எனும் உயர் சிறப்புப் பட்டத்தை நல்கினார்கள். அவ்வமயம் தொண்ணூற்றாறூர் நகரத்தார்களும் கோவிலூரில் கூடி ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியாரவர்களுக்குக் கிடைத்த பெருமை நகரத்தார்களுக்கே அளிக்கப்பட்ட பெருமையென எண்ணி மகிழ்ந்து, இதுகாறும் இப்பகுதியில் நடந்திராத அளவு சீரும் சிறப்புடன் ராஜா அவர்களுக்கு விசேஷ மரியாதைகளும் விருந்துகளும் நடத்திப் பாராட்டினார்கள். வேறு பல இடங்களிலும், கொழும்பு, பர்மா, சுமாத்ரா, ஜாவா முதலிய அயல் நாடுகளிலும் இவர்கட்கு விசேஷ மரியாதைகளும் வரவேற்புகளும் அளிக்கப்பட்டன.

1932ம் வருஷத்தில் சென்னை சர்வகலாசாலையார் இவர்களுக்கு டாக்டர் (LL. D.) எனும் கௌரவப் பட்டத்தை வழங்கிச் சிறப்பித்தார்கள்.

1935-ம் வருஷம் இவர்கள் இங்கிலாந்து, பிரான்ஸ், இத்தாலி, ஜர்மனி முதலிய ஐரோப்பிய நாடுகளிலும், அமெரிக்காவிலும் சுற்றுப் பிரயாணம் செய்தார்கள். அவர்களுடன் ஸ்ரீமதி சீதை ஆச்சியும் சென்றது குறிப்பிடத்தக்கது. ராஜா தம்பதிகள் லண்டனிலே ஐந்தாம் ஜார்ஜ் மன்னருக்கு அறிமுகப்படுத்தி வைக்கப்பட்டு அவரால் வரவேற்கப்பட்டனர். இன்னும் பர்மாப் பிரிவினை சம்பந்தமாக பிரிட்டிஷ் மந்திரிகள் பலரையும் சந்தித்துப் பேசினார்கள். இவர்களது முயற்சியின் பலனாக, பர்மாப் பிரதிநிதிகள் சபையில் தனவைசியர் சங்கத்துக்கு ஒரு ஸ்தானம் கொடுக்கப்பட்டிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களது நுண்மதியால் இன்று நிலைபெற்றுச் செழித்தோங்கும் வர்த்தக, தொழில் ஸ்தாபனங்கள் கணக்கிலடங்கா. அவர்களது பொருளுதவியால் சீரும் சிறப்பும் பெற்றுத் திகழும் பொது ஸ்தாபனங்கள் எண்ணற்றவை. பெண்மக்கள் நலங்கருதி சென்னையில் 'வில்லிங்டன் கிளப்' ஏற்படுத்தி அதற்கு மூலதனமாக இரண்டு லட்ச ரூ. உதவினார்கள். இன்னும் சிதம்பரம் முதலிய இடங்களில் ஆலயத் திருப்பணிக்காகப் பல லட்சக் கணக்கில் கொடுத்திருக்கிறார்கள். அவர்களது உதவியால் கல்விக் கண்பெறும் ஏழை மாணவர் எண்ணற்றவர். ஏராளமான கல்வி ஸ்தாபனங்கட்கும், இதர ஸ்தாபனங்களுக்கும் உதவி, கலை வளர்க்கும் வள்ளலாகத் திகழ்கிறார்.



## ராஜா குடும்பம்

ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியாரவர்கட்கு மூன்று புதல்வர்களும் நான்கு புத்திரிகளும் இருக்கின்றனர். மூத்த குமாரர் குமார ராஜா முத்தையா செட்டியாரவர்கள் கல்லூரிப்படிப்பில் தேர்ச்சி பெற்றுத் தம் தந்தையாரைப் போலவே பொது வாழ்விலும் ஈடுபட்டு, எல்லோர் நன் மதிப்பையும் பெற்று விளங்குகிறார். இவர் சென்னை நகரில் இரு முறை மேயராகவும், இரு முறை மாகாண மந்திரியாகவும் திகழ்ந்தார். சட்ட சபையிலும், பல வர்த்தக சபைகளிலும் உறுப்பினராக இருக்கின்றார். சமீப காலத்தில் இவரது பொதுச் சேவையைப் பாராட்டி "சர்" என்ற சிறப்புப்பட்டம் இவருக்கு அளிக்கப்பட்டது. இவருக்கு இரு ஆண்குழந்தைகள் இருக்கின்றன.

இரண்டாவது புதல்வர் ஸ்ரீமான் இராமநாதன் செட்டியாரும் கல்வித் தேர்ச்சி உடையவர்; பொது நலத் தொண்டில் ஆர்வமுள்ளவர். அவர் இப்போது சென்னையில் உபஷெரீபாக இருந்து வருகிறார். இவருக்கு ஒரு ஆண்குழந்தை இருக்கிறது.

மூன்றுவது புத்திரர் ஸ்ரீமான் சிதம்பரம் செட்டியார். இவர் தொழிற்கல்வியில் தேர்ச்சிபெற்றுத் திகழ்கிறார். இவருக்கு ஒரு ஆண் குழந்தை இருக்கிறது.

முதல் குமாரத்தி ஸ்ரீமதி வள்ளியம்மை ஆச்சி. இவ்வம்மையாரின் கணவர் கோட்டையூர் ஸ்ரீமான் பெ. மு. அ. லெ. அழகப்ப செட்டியாரவர்கள். இவர்கள் ராஜா சர் அவர்கள் தமக்கையின் ஒரே புதல்வர். இவர்களுக்கு ஒரு பெண்ணும் ஒரு ஆணுமாக இரு குழந்தைகள் இருக்கின்றன. பள்ளத்தூர் திவான் பகதூர் முருகப்ப செட்டியார் அவர்களின் மூன்றுவது குமாரன் ஸ்ரீமான் அருணசலம் செட்டியாருக்கு பெண்ணை மணஞ்செய்து கொடுத்திருக்கின்றனர். குமாரன் திரு. லெட்சுமணனுக்கும் பள்ளத்தூர் திவான் பகதூர் முருகப்ப செட்டியாரவர்கள் பேத்தி வள்ளியம்மைக்கும் விவாகம் நிகழ்ந்திருக்கிறது.

இரண்டாவது குமாரத்தி ஸ்ரீமதி மீனாட்சி ஆச்சி. காரைக்குடிகாத்தான் ராவ்பகதூர் க. வெ. சித. வெங்கடாசலம் செட்டியார் அவர்களின் வாழ்க்கைத் துணைவி. இவர்களுக்கு இரு பெண் குழந்தைகள் உண்டு.

மூன்றுவது குமாரத்தி ஸ்ரீமதி உண்ணாமலை ஆச்சி. இவரது கணவர் கோட்டையூர் ஸ்ரீமான் ஏ. கே. ஸிடி. ஏ. எல். சிதம்பரம் செட்டியார் அவர்கள். இவர்களுக்கு மூன்று பெண்களும் ஒரு குமாரனும் இருக்கின்றனர். இவர்களது மூத்த பெண்ணுக்கும் புதுவயல் திருவாளர் ஏ. மு. முத்தப்ப செட்டியார் குமாரன் திரு. விஸ்வநாதன் செட்டியாருக்குஞ் சமீபத்தில் தான் விவாகம் நிகழ்ந்தது.

நான்காவது குமாரி ஸ்ரீமதி லட்சுமி ஆச்சி. இவரது வாழ்க்கைத் துணைவர் கண்டனூர் ஸ்ரீமான் லெ. [illegible] சித. லெ. பழனியப்ப செட்டியாரவர்களின் குமாரர் திரு. லட்சுமணன் செட்டியாரவர்கள். இவர்கட்கு ஓர் ஆண் குழந்தை இருக்கிறது.

—

## செட்டிநாட்டுச் சிறப்பு

(டி. காளஹஸ்தி நாதன் பாடியது)

திருமகட் கினிய நாடு
திசையெலாம் புகழு நாடு
ஒருவலில் உறுதி யூக்கம்
உடையவர் ஓங்கு நாடு
தருமமுந் தவமுஞ் செய்வார்
தழைப்பதைக் காட்டு நாடு
மருமலர்த் தொடைய லண்ணா
மலைதிகழ் செட்டிநாடு.

குமரன்

காரைக்குடி
விஷு ௵ புரட்டாசி ௴ 16-உ

## ராஜாச் சாந்தி

அறுபது ஆண்டு முடிவு பெற்றால் அறுபத்தோராவது ஆண்டின் முதல் நாளை ஒரு முக்கிய நாளாகக் கொண்டாடுவதை ஹிந்துக்கள் விசேஷமாக நினைக்கிறார்கள். சாதாரணமாக இந்நாளைய மனிதர் அறுபதாண்டு வரை சுகமாக இருப்பது ஒரு பெரிய காரியமாக இருப்பது தான் அதற்குக் காரணம். மற்றவர் வெள்ளி விழா, தங்க விழா, வைர விழா என்று 25, 50,100 ஆண்டுகளில் நடத்தி வருவதை நாமறிகிறோம். ஹிந்துக்களின் வருஷம் அறுபதாண்டுகளில் மாறுகிறது. அதை யொட்டியும் அறுபதாம் ஆண்டு விழாக் கொண்டாட்டம் துவக்கப்பட்டிருக்கலாம். எப்படியும் ஒருவர் அறுபதாண்டிருப்பதும் அதனைக் கொண்டாட்டமாக விழா வெடுப்பதும் இயல்புதான்.

இந்த மாதிரியான ஷஷ்டியப்த பூர்த்தியை அறுபதாண்டிருக்கிற யாவரும் கொண்டாட முற்படுகின்றனர். அவரவர் தகுதிக்கேற்ப இவ்விழா சிறப்பை யடைகிறது. அறுபதாண்டு வாழும் ஒருவருக்குப் பிள்ளையே பிறவாமலிருக்கிறது. பிறந்தாலும் அதற்குக் கல்யாணமாகிறதில்லை. அல்லது குழந்தை பிறக்கிறதில்லை. குடும்பத்தில் மற்றெல்லாரும் மகிழ்ச்சியில் திளைப்பார்கள். ஒரு பெண் துயரப்பட்டுக்கொண்டிருக்கும். அல்லது சம்பந்தி சண்டை போட்டுக் கொண்டு வடக்கே போய்க்கொண்டிருப்பார். கடைசியாக மனைவி இறந்து போய் 59ல் சாந்திக்காக ஒரு கல்யாணம் நடக்கவேண்டி நேரும். இல்லாவிட்டால் கைவிளக்குப் பிள்ளையை வைத்து சாந்தி நடக்கவேண்டியிருக்கும். இவையெல்லாம் ஒருவருக்குக் குறைபாடன்று. இயற்கையாக உலகச் சுழலில் நடக்கிற காரியங்கள்தாம். மக்களாகப் பிறந்துவிட்டால்—இந்துவாகத்தோன்றி விட்டால்—சாந்திக் கல்யாணம் வரை இவற்றுள் ஒரு குறையுமில்லாமல் மனித வாழ்வு நடப்பதில்லை. எதிர்பார்க்கக்கூடியது மல்ல.

எல்லாம் பொருந்தியிருக்கும். சாந்திச் செலவுக்கே பணம் தடவும். பணம் நிறைய இருக்கும். செலவு செய்ய கை வாராது. கை வந்தாலும் வரும்; ஒழுங்காகச் செலவிட்டுச் சிறப்பாக நடத்த வாராது. உதவிக்கு ஆள் சேராது. சிநேகிதர் பூஜ்யமாக இருக்கும். தப்பித் தவறி யாராவது சிநேகிதர்களிருந்தால் அவர்கள் "எப்படியாவது இந்த சமயத்தில் கொஞ்சம் இறக்கிவிட வேண்டும்" என்று கருதி விஷமம் செய்வார்கள். அழைப்பு அனுப்பினால் 1000 த்துக்கு 100 கூட ஆள் வாராது. பிள்ளைகளிருப்பார்கள்; உள்ளே விட்டால் நகைகளுக்குக் காவல் போடவேண்டியிருக்கும். இப்படிப்பட்ட துயரங்கள் பல மனித வாழ்க்கையினுள் கலந்து கிடக்கின்றன. இவற்றைத் தப்பி மேலேறி நிற்பது முடியாத காரியந்தான்.

ராஜா சர் அவர்களுக்கு நடந்த சாந்தி இந்த மனித வாழ்க்கையின் அலைக்கு பேறப்பட்டு நின்று நடைபெற்ற சாந்தியாகுமென்று கூறுவதில் தடையில்லை. நிறைந்த செல்வம்—நிறைந்த மக்கள்—பேரன் பேத்தியர்—நிறைந்த செல்வாக்கு—அவர்களிடம் உள்ளன்பு கொண்ட சிநேகிதர்கள்—அவர்கட்கு விழா நடப்பதில் ஆர்வங் கொண்ட பொது ஜனங்கள்—அவர்களின் எல்லையற்ற திறமை, எல்லாம் சேர்ந்து பொலிந்து விளங்குகிற காலத்தில் சாந்தி விழா வந்து கூடியிருக்கிறது. விழா உயர் நிலையில் சோபிக்கத்தானே செய்யும்?

ராஜா சர் அவர்களுக்கு ஒரே மனைவி. சீதை யாச்சியின் பெருமையை "பானை பிடித்த முகூர்த்தத்தினால் வந்த பாக்கியமே" என்று மதுரை மீனாட்சியை ஒரு புலவர் பாடியபடி, இந்தப் பகுதியிலுள்ள மக்கள் பாராட்டுவது வழக்கம். ஆண் மக்கள் மூவருக்கும் முதல் மனைவியர் மங்களகரமாக வாழ்ந்து கொண்டிருக்கின்றனர். பெண் மக்கள் நால்வரும் கணவர்களுடன் இனிது வாழ்கின்றனர். எல்லோருக்கும் குழந்தைகள் திகழ்கின்றனர். ராஜா அவர்களின் வம்சத்தில் வயது வந்த பிள்ளைகட்கெல்லாம் கல்யாணமாகிவிட்டது. ஒரு வருஷத்திற்கு முன் கல்யாணமான எல்லாரும் தாய் தந்தையராக இருக்கின்றனர். ஒரு குடும்பத்திலும் வருத்தத்திற்கிடமில்லை. இது ஒரு பேராச்சரியமான காரியமாகும். வேறு எங்கும் முடியாது; முடியாது. இதனால்தான் இந்த சாந்தி "ராஜாவுக்கு நடந்த சாந்தி மட்டுமல்ல; எல்லாச் சாந்திகட்கும் ராஜாச் சாந்தி இது" என்று நாம் கூற விரும்புகிறோம்.

ராஜா சர் பிறக்கும்போது அவர்கள் குடும்பம் ஒருவாறு லட்சாதிபதி குடும்பந்தான். இவர்கள் அதிகாரத்திற்கு வந்தது முதல் வளர்ந்து கோடீஸ்வரர் குடும்பமாகவும், நகரத்தாருள் முதலாவது செல்வர் குடும்பமாகவும் செழித்து நிற்கிற தென்பது கவனிக்கத்தக்கது. பணம் சம்பாதிப்பதில் ஒப்பற்ற நிபுணராக விளங்குகிறார்; கிடைத்த பணத்தைப் பத்திரப்படுத்துவதிலும் அதி நிபுணராவர்; அதைப் பயன்படுத்துகிற விதம் எண்ணி யெண்ணி வியக்கத்தக்கதாக இருக்கிறது. நகரத்தாருள் அறுபது எழுபது லட்சம் தர்மச் செலவு செய்த பெரியவர்களுண்டு. பல லட்சம் செலவிட்டுக் கோயில் கட்டியிருப்பர்; கும்பாபிஷேகத்தன்று உள்ளே போக வழியகப்படாமல் தவிக்கவும் நேரும். அண்ணாமலை யுனிவர்சிட்டிக்குக் கொடுத்த சொற்பப்பணம், ராஜாவின் செல்வத்தை நோக்கும்போது சொற்பப் பணந்தான்! அது செய்த வேலை எவ்வளவு? மற்றொருவர் ஒரு கோடியைக் கொட்டிக் கொடுத்தாலும் 'நம்முடைய' தமிழ்நாட்டில் உருப்படியான ஒரு பள்ளிக்கூடமாவது ஏற்பட முடியுமாவென்று யோசித்துப் பார்க்கவேண்டும். தமிழிசைக்குக் கொடுத்த ஒரு பத்தாயிரம் தமிழ்நாட்டைக் குலுக்கி விட்டது. மற்றொருவர் கொடுத்திருந்தால் அந்தச் செய்தி வெளியேகூடத் தெரியாது போகக் கூடும். ராஜா தேடுவது போலவே பெருக்குகிறார்; பந்தோபஸ்து செய்கிறார். சல்லிகூட வீணாகாதபடி பயன்படுத்துகிறாரென்பது தான் பெரிய காரியம்.

ராஜா சர் இடத்தில் முக்கியமாகக் கவனிக்கத்தக்க குணங்கள் சில. அவருடைய நிர்வாகத்திறமை அபரிமிதமானது. காரியசித்தியிலேயே நோக்கம். ஒன்றைக் குறிக்கொண்டு முயன்றால் அது முடியுமட்டும் மெய்வருத்தம் பாராமல், பசியை நோக்காமல் அதனால் வரும் கஷ்டம் தம்முடைய நிலைக்கு இறக்கமெனக் கருதப்படக் கூடிய சந்தர்ப்பம் ஆகியவைகளைப்பற்றிச் சிந்திப்பதில்லை. அதற்கிடையில் தோன்றுபவர்களை எப்படி நேர் செய்வதென்பதையே குறிக்கோளாகக் கொண்டு முடித்துத் தான் தீர்ப்பார். ஆதரவு செய்பவரைவிட எதிர்ப்பு செய்யக் கூடியவரைத்தான் முதலில் சரிப்படுத்த முற்படுகின்றார். அதில் தான் காரியசித்தி எளிமையாகக் கிட்டுகிறது. 100 பேர் சம்பந்தப்பட்டு முடிய வேண்டிய காரியத்தில் 52 பேரின் ஆதரவு போதுமென்று நினைக்கிறதே கிடையாது. 100 பேரையும் சரிப்படுத்தவே கடைசிவரையும் முயற்சி நடைபெறும். கடுமையாகப் பேணி சம்பாதிக்கப்படுகிற பணமானது குறித்த காரியத்தை முடிப்பதற்கு அவர் முயற்சி செய்யும் போது தண்ணீராகப் பாய்ந்து ஓடுவதையும் காணலாம். கொடுப்பதிலே தாராள மனப்பண் புடையவர். தேடுவதில் செட்டுடையவ ரென்றால் அது பொருத்தமானது தான்.

தமக்கு முன்னால் எதிர்ப்படுவோர் யாரானாலும் உபசரிக்க அவர் மனம் மொழி மெய் எல்லாம் தயாராக இருக்கின்றன. பணத்தின் ஏற்றத்திற்காகவும், செல்வாக்கின் உயர்ச்சிக்காகவும் இந்நாள் மக்கள் எல்லாரும் ஈடுபடவில்லை. ராஜா சர் அவர்களுடைய அறிவு, திறமை, உபசரிப்பு, எளிமைக் குணம், இன்சொல், தாராளம் இவைகளுக்கு ஆட்படாதவர் இருக்க முடியாது மனித உள்ளமானது இந்தக் குணங்களைப் புறக்கணித்து ஒதுங்கிப் போகும்படி படைக்கப்பட்டிருக்கவில்லை யென்பது ஒரு உண்மைத் தத்துவமாகும். இப்படிப்பட்ட குணங்கள் எப்படியோ ராஜா சர் அவர்கட்கு இயற்கையில் அமைந்துவளர்ந்து பூரண வெற்றியையும் அளித்து விட்டன வென்னலாம். அவர்களுடைய செல்வமும் செல்வாக்கும் உயர உயர இக் குணங்கள் பஞ்ச மடையவில்லை. போட்டி போட்டு வளர்ந்து விட்டன. இக் குணங்கள் செல்வமும் செல்வாக்கும் நிறைந்த ஒருவரிடம் சோபிக்கும் போது உலகம் அவரிடம் வசப்பட்டு விடுகிறது என்ற உண்மை இங்கே விளக்கமாகக் காணப்படுகிறது.

குறைவென்பதே இன்றி நிறைவுடன் நடைபெற்றுள்ள இந்த சாந்தி மாதிரி இதுவரை நடைபெற்றதில்லை. இனி நடைபெறவும் முடியாது. ஆதலால்தான் இந்த சாந்தியை ராஜாச் சாந்தி என்று கூற விரும்பினோம்.

## உள்ளூர்ச் செய்திகள்

### மகார்நோன்பு விழா

காரைக்குடியில் சென்ற செவ்வாய்க் கிழமை மகார்நோன்பு விழா நடைபெற்றது. மாலை 6 மணிக்கு மேல் நீண்ட நேரம் மழை பெய்ததால் சுவாமிகள் புறப்படத் தாமதமாயிற்று. சென்ற வருடம் சுவாமி தூக்குவதில் ஏற்பட்ட தகராறு காரணமாக இவ்வருடம் கோவிலூர்ச் சுவாமிக்கு முன்னும் பின்னும் பலத்த போலீஸ் பந்தோபஸ்து ஏற்படுத்தப்பட்டிருந்தது இரவு சுமார் 11 மணிக்கு நான்கு சுவாமிகளும் அம்பு போட்டன.

### இந்துஸ்தான் சாரணர் சங்கம்

நேற்று மாலை 5 மணிக்கு காரைக்குடி லோக்கல் சங்கத்தின் சார்பாக யஸ். யம். யஸ். ஹைஸ்கூல் விளையாட்டு மைதானத்தில் ஷை ஸ்கூல் ஆசிரியர் ஸ்ரீ எஸ். ராஜகோபாலய்யர் பி. ஏ., எல். டி., அவர்கள் சாரணர் கொடியைப் பறக்க விட்டு, சாரணியத்தைப் பற்றிப் பேசினார். சாரணர்கள் அணிவகுத்துக் கொடி வணக்கம் செய்தனர். பின்னர் ரோவர் லீடர் உள்பட எல்லோரும் பிரதிக்ஞையை எடுத்துக்கொண்டனர். பின் ஹைஸ்கூல் பிரார்த்தனை மண்டபத்தில் தலைமை ஆசிரியர் ஸ்ரீ ஏ. இராமானுஜய்யங்கார் அவர்கள் B. A., L. T., தலைமை வகித்து அன்னி பெஸண்டம்மையாரைப் பற்றிப் பேசினார். மகாத்மா காந்தி நீடூழி வாழவேண்டுமென்று ஸ்கவுட் மாஸ்டர் ஸ்ரீ S. சீனிவாசய்யங்கார் பேசினார். வந்தனங் கூறலுடன் கூட்டம் முடிந்தது.

## கதர் தத்துவம்

### காந்திஜி விளக்கம்

மகாத்மா காந்தி 1927-ம் வருஷம் செப்டம்பர் ௴ சிதம்பரத்திற்கு வந்திருந்தபோது 'நந்தனாரை'ப் பற்றிப் பேசுகையில் கதரின் மகிமையை அடியில் வருமாறு விளக்கினார்:

'கதர் உள்ளத்'திற்கு எல்லையற்ற பொறுமை வேண்டும். கதர் உற்பத்தி செய்தவர்களுக்கு நூற்போரும், நெய்வோரும் எவ்வளவு பொறுமையுடனிருந்து தொழில் செய்ய வேண்டியிருக்கிறது என்பது தெரியும். அதே போல் "ஸ்வராஜ்ய நூல்" நூற்கும்போதும் நமக்குப் பொறுமை வேண்டும்.

'கதர் உள்ளம்' என்றால் அளவற்ற நம்பிக்கை வேண்டும். நூற்போன் ஒருவன் தான் நூற்பது எவ்வளவு சொற்பமாயினும் நூற்கும் நூல் எல்லாம் சேர்ந்து இந்தியாவிலுள்ள ஒவ்வொரு மனிதனுக்கும் உடுக்கப் போதுமானது என்று எவ்வாறு சர்க்காவில் அளவற்ற நம்பிக்கை வைத்திருக்கிறானோ, அதே போல் நாம் இடர்ப்படும் எல்லாவற்றையும் ஸத்யமும் அஹிம்ஸையும் வென்றுவிடும் என்று அவற்றில் நம்பிக்கை வைக்கவேண்டும்.

மக்களிடையே அன்பும் சகோதர மனோபாவமும் ஏற்படுமாயின் அதுவே கதர் தத்துவத்தின் உயிராகும். மக்களுக்கு துன்பமுண்டாக்கவல்ல கருமங்களனைத்தையும் தத்தம் செய்துவிட்டு தன்னைப் புனிதமாக்கிக் கொள்ளுவதுதான் கதர் தத்துவத்தின் உட்கருத்தாகும்.

### காந்தி ஜெயந்திக் கன்வீனர்

காரைக்குடியில் 2—10—41 முதல் 8-10-41 வரை காந்தி ஜெயந்தியைக் கொண்டாடுவதற்கு ஸ்ரீ ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் காந்தி ஜெயந்தி விழாக் கமிட்டிக் கன்வீனராக 27-9-41ல் காங்கிரஸ் மாளிகையில் நடைபெற்ற கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்பெற்றிருக்கிறாரென்று நகர சத்யாக்ரகக் கமிட்டிக் காரியதரிசியால் அறிவிக்கப்படுகிறது.

### மகளிர் இல்லத்திற்கு B. A., L. T.

ஸ்ரீ ச. சரஸ்வதி அம்மாள் B.A.,L.T. அவர்கள் அமராவதிபுதூர் மகளிர் இல்லத்தின் பாடசாலைகட்கு ஹெட் மிஸ்ட்ரஸ் ஆக நியமிக்கப்பெற்றிருக்கிறார்கள். இவர்கள் மாண்டிசோரி ட்ரெயினிங்குக்கும் போய் பாஸ் செய்தவர்கள்.

### இலக்கியப் பண்ணையில் தமிழ்ப்பாட்டு அபிநயம்

தியாகராய நகர் திரு. நீலாவதி-ராமசுப்பிரமணியம் இல்லத்தில் இலக்கியப் பண்ணையின் சார்பாக 4-10-41 சனிக்கிழமை மாலை 5½ மணிக்கு ஸ்ரீமதி ஸ்வர்ன ஸரஸ்வதி தமிழ்ப் பாட்டு அபிநயம் செய்வார்; கம்பன், திருவாய்மொழி, ராமலிங்க சுவாமிகள், சுந்தரர் தேவாரம் முதலியவற்றிலிருந்து பல ரசமான பாட்டுக்களின் கருத்தைச் சொல்லி பக்கவாத்தியங்களுடன் அபிநயம் நடைபெறும்.

### 73,000 கஜம் கதர் நூல் பரிசு

மகாத்மா காந்தியின் 73வது பிறந்த தின விழாவை முன்னிட்டு, கான்பூர் சத்யாக்ரகக் கமிட்டி 73,000 கஜம் கதர் நூலை அவருக்குப் பரிசாக அனுப்பியிருக்கிறது.

### உத்தியோக மாற்றம்

காரைக்குடியில் போஸ்டு மாஸ்டராக இருந்த திரு. K. S. சிதம்பர அய்யர் திருச்சினாப்பள்ளி ஹெட் போஸ்டாபீசுக்கு சூபர்வைஸராக மாற்றப்பட்டு இருக்கிறார். அவருக்குப் பதிலாக (கண்டனூர் போஸ்டுமாஸ்டர்) திரு. V.R. கிருஷ்ணமூர்த்தி அய்யர் இவ்வூருக்கு மாற்றப்பட்டு அன்னார் 29—9—41ல் சார்ஜ் ஏற்றுக்கொண்டார்.



## ஹிந்தி வாரம்

### சென்னையில் ஆரம்ப விழா

சென்ற செப். 28-ந் தேதி மாலை தக்ஷிண பாரத ஹிந்தி பிரசார சபையின் ஆதரவில் ஹிந்தி வாரக் கொண்டாட்டம் எஸ்பிளனேட் ஒய். எம். ஸி. யே. பில்டிங்கில் சென்னை மேயர் ஸ்ரீ ஜி. ஜானகிராம் செட்டியாரால் ஆரம்பித்து வைக்கப்பட்டது. ஸ்ரீமான் ஸி. என். முத்துரங்க முதலியார் அன்றைய கூட்டத்திற்கு தலைமை வகித்தார்.

சபையின் காரியதரிசி ஸ்ரீ எம். சத்யநாராயணா மேயரையும் தலைவரையும் வரவேற்று, சபையின் வேலைகளைப் பற்றிக் கூறினார். "இப்போது 1200 ஊழியர்கள் இருக்கிறார்கள். 600 பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. இவர்களில் பெரும்பாலோர் கௌரவ ஊழியர்கள். பொது ஜனங்கள் சபைக்குத் தாராளமாக ஆதரவு அளித்து வருகிறார்கள். தென்னிந்தியர்களை வருஷத்தில் ஒரு வாரமாவது "ஹிந்தி மனம்" படைத்தவர்களாகச் செய்யவேண்டுமென்பதே இவ்வாரம் கொண்டாடுவதின் நோக்கம்" என்று அவர் கூறினார்.

ஸ்ரீ. ஸி. என். முத்துரங்க முதலியார்: "ஹிந்தியை பாடத் திட்டத்தில் சேர்த்தால் இளைஞர்களின் மூளைக்கு அது அதிக சுமையாகிவிடும் எனக் கூறுவது தவறு. கிரேக்கர் முதலிய மக்களின் சரித்திரத்தைப் படிப்பதைக்காட்டிலும் ஹிந்தி படிப்பது அதிக முக்கியமாகும். ஹிந்தியை கட்டாய பாடமாக்கியது சரியே. சுயராஜ்யம் வந்தால் அந்த சுதந்திர இந்தியாவின் மத்திய சர்க்கார் அகில இந்திய சர்வீஸ்களுக்கு ஹிந்துஸ்தானி தெரிந்திருக்கவேண்டும். இப்போதுள்ள ஏகாதிபத்ய சர்க்கார் கூட ஸிவில் ஸர்வீஸ்களுக்கு ஹிந்துஸ்தானி தெரிந்திருக்க வேண்டுமெனக் கட்டாயமாகச் செய்திருக்கிறது" என்று குறிப்பிட்டார்.

ஸ்ரீ ஜி. ஜானகிராம் செட்டியார் ஹிந்தி வாரத்தை ஆரம்பித்து வைத்துப் பேசுகையில் "இந்தியாவில் பெரும்பாலான ஜனங்கள் ஹிந்தி பேசுகிறார்கள். அது ஒன்று தான் இந்தியாவின் பொது பாஷையாக இருக்கமுடியும் என்பது ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஜனங்கள் ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் போகும் இந்த நவீன காலத்தில், அவர்கள் ஜனங்களுக்கு இன்னும் அருகில் செல்ல ஒரு பொதுபாஷை இருக்கவேண்டும்" என்றார்.

ஸ்ரீ எம். பக்தவத்ஸலம் பேசுகையில் "இந்தியாவை ஒரே தேசமாகக் கருதுகிறவர்கள் தான் ஹிந்தியின் முக்கியத்துவத்தைத் தெரிந்துகொள்ள முடியும். அதிருஷ்டவசமாக இரு தேசம் வேண்டுமென்று கூறுவோர் சிலர்தானிருக்கிறார்கள். தேசீய பாஷை தெரிந்தால்தான் சுதந்தர இந்தியாவில் நமது சரியான பங்கைப் பெற முடியும்" என்று கூறினார்.

ஸ்ரீ சின்னசாமி ஐயங்கார், பெங்களூர் நேஷனல் உயர்தர பாடசாலை தலைமை உபாத்தியாயரான ஸ்ரீ கே. சம்பாதிகாரி ராவ், ஸ்ரீ கே. தேவதூத் வித்யார்த்தி இவர்கள் பேசினர்.

ஸ்ரீ பி. ஜெகன்னாத தாஸால் வந்தனோபசாரம் கூறப்பட்டு அன்றைய கூட்டம் முடிவுற்றது.

### மாகாண பாஷைகள் தினம்

ஹிந்தி வாரத்தின் 'மாகாண பாஷைகள் தினம்' அடுத்த நாள் 29-ந்தேதி சென்னை ஜார்ஜ் டவுன் ஒய். எம். ஐ. ஏ. கட்டிடத்தில் 'தினமணி' ஆசிரியர் ஸ்ரீமான் டி. எஸ். சொக்கலிங்கம் தலைமையில் கொண்டாடப்பட்டது. தலைவர் தனது உரையில் ஹிந்தி கற்பதால் தமிழுக்குப் பாதகம் ஏற்படாதென்றும், ஹிந்தி தான் தேச பாஷையாக இருக்க முடியுமாகையால் அதிலேயே கலைச் சொற்கள் அமைவது நலமென்றும் கூறினார். அடுத்தபடியாகப் பேசிய பக்தவத்ஸலம் பொதுவாக மாகாண பாஷைகளும் சிறப்பாகத் தமிழும் வளர்ச்சியடையக் காங்கிரஸ் சர்க்கார் எடுத்துக்கொண்ட விஷயங்களை விரிவாகப் பேசினார். ஸ்ரீ ஏ. எம். கோபாலகிருஷ்ணன் ஹிந்தி தான் ராஷ்டிர பாஷையாக இருக்க முடியுமென்பதை விளக்கினார்.

பொதுக் காரியதரிசி சத்தியநாராயணா வந்தனோபசாரம் கூறினார்.

## வாழ்த்துப் பாக்கள்

(சி. தேசிக விநாயகம் பிள்ளை)

சீருயரும் வணிகர் குலம் சிறக்க வந்தோன்
தில்லையிலே கலைவளரக் கழகம் கண்டோன்
பாரதநன் னாடெங்கும் புகழ் விரித்தோன்
பாடுமிசைத் தமிழ்வளரப் பண்ணை செய்தோன்
மாரியென வழங்கியறம் வளர்க்குஞ் செல்வன்
வள்ளலண்ணா மலையரசன் சுற்றத்தோடு
வாரிதிசூ ழிவ்வுலகில் வாழ்க மாதோ!
வளர் பிறைபோல் வளர்ந்துநிதம் தழைக மாதோ!!

('இந்திரா' சாந்தி விசேஷ மலர்)

★

(காரைக்குடி நகர சுகாதார அதிகாரி
டாக்டர் வி. சு. நடராஜன் L. M. P., L. Ph.)

தன்பெயரா லொருநகரந் தன்னை நாட்டிச்
சர்வகலா சாலையதிற் றாபித் தென்றும்
மன்புவியும் மக்களும்நற் பெரும்பே றெய்த
வளர்த்தருள்வோன் வள்ளலெழு மூவர்தாமே
யின்புடனோர் திருவுருக்கொண் டுதித்தா ரென்ன
இருநிலம்போற் றிடவுதித்த இராச தந்த்ரி
பொன்படைத்தோர் தம்மிலெவர் இவ்வேள்போன்று
புகழ்படைத்தார் பூதலத்திற் புனிதம் வாய்ந்தே?

## "இந்திரா" விசேஷ மலர்

செட்டிநாட்டு ராஜா சர் அவர்களின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழாவை யொட்டி இம்மலர் வெளியிடப்பட்டிருக்கிறது. மலர் 184 பக்கங்கள் கொண்டு விளங்குகிறது. இதில் 3 கலர் படங்களும் 70 ஆப்டோன் படங்களும் இருந்து அழகு செய்கின்றன. முதற்பக்கம் ராஜா சர் அவர்களின் உருவப்படம் மூன்று வர்ணங்களில் கண்கவர் வனப்புடன் மிளிர்கிறது. இதில் ஏராளமானவர்களின் வாழ்த்துரை புகழ்ச்சி உரைகளும் அடங்கியுள்ளன. ராஜா சர் அவர்களின் குடும்ப விவரங்கள், அவர்களின் சரித்திரம், செய்துள்ள தருமங்கள், குணாதிசயம் முதலிய விஷயங்களை விளக்கி யெழுதப்பட்ட கட்டுரைகளும் சேர்க்கப்பட்டுள்ளன. வி. பி. சுப்பிரமணிய முதலியார், டி. கே. ஸி. சுவாமி சுத்தானந்த பாரதியார், நீலாவதி ராமசுப்பிரமணியம், சொ. முருகப்பா, ஜெகவீரபாண்டியன், எப். நடேசய்யர், ரா. பி. சேதுப் பிள்ளை, கா. சுப்பிரமணிய பிள்ளை, பி. ஸ்ரீ. முதலிய பலருடைய கட்டுரைகள் மலரை அலங்கரிக்கின்றன. கவி தேசிக விநாயகம் பிள்ளை, அ. சிதம்பரநாதச் செட்டியார் முதலியோரின் பாடல்களும் ஒளி செய்து நிற்கின்றன. உயர்ந்த காகிதத்தில் நன்றாக அச்சிடப்பட்டுப் பலவித்திலும் மலர் கவினுற விளங்குகிறது. 'இந்திரா' ஆசிரியர் திரு. ராம. பழனியப்ப செட்டியார் ஊக்கம் மிக்க இளைஞர்; நல்ல தமிழறிஞர்; உடலினை உறுதி செய்யும் பயிற்சியில் தெளிந்தவர். குறிப்பிட்ட இந்த விசேஷ மலரை மிகத் திறம்பட வெளியிட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இதன் விலை ஒரு ரூபாய். தபால் செலவு வேறு. கிடைக்கு மிடம் "இந்திரா" ஆபீஸ் செட்டி நாடு.

## காந்தி ஜெயந்தி: கதர் வாரம்

காரைக்குடியில் காந்தி ஜெயந்தி சம்பந்தமாகச் செயலாளர் ஸ்ரீ ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் விடுத்திருக்கும் அறிக்கையில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—

நாளது 2—10—41 வியாழன் முதல் 8-10-41வரை நமது நகரில்காந்திஜெயந்தியை மிகவும் விமரிசையாகக் கொண்டாட ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. காந்தியடிகளின் பிறந்த தினமாகிய 2—10—41 வியாழன் அன்று நகரைத் தோரணங்களாலும், தேசீயக் கொடிகளாலும் அலங்கரித்து எல்லா நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளும்படி எல்லா பொது ஸ்தாபனங்களையும், எல்லா பொது மக்களையும் கேட்டுக்கொள்கிறேன்.

### நிகழ்ச்சிக் குறிப்பு

2—10—41 வியாழன்: காலை 8 மணிக்கு காங்கிரஸ் மாளிகையில் கொடியேற்று விழா. பகல் 12 மணிக்கு ஹரிஜனங்களுக்கு உணவளித்தல். மாலை 5 மணிக்கு காங்கிரஸ் மாளிகையிலிருந்து காந்தியடிகளின் உருவச்சிலையுடன் மாபெரும் ஊர்வலம், முக்கிய வீதிகளின் வழியாக காந்தி சதுக்கத்தை அடையும். காந்தி சதுக்கத்தில் பொதுக்கூட்டம்.

3-10-41 வெள்ளி: தெற்கு டிவிஷன் சேரி சுத்தம் செய்தல்.

4—10—41 சனி: வடக்கு டிவிஷன் சேரி சுத்தம் செய்தல்.

5—10—41 ஞாயிறு: காங்கிரஸ் மாளிகையில் காலை 10 மணி முதல் 12 மணி வரை தக்ளி, இராட்டினம் நூற்றல் போட்டி.

6—10—41 திங்கள்: மாலை 6 மணிக்கு கல்லுக்கட்டி மணிக்கூண்டிற்கு அருகில் பொதுக்கூட்டம்.

7—10—41 செவ்வாய்: மாலை 6 மணிக்கு செஞ்சைப் பொட்டலில் பொதுக் கூட்டம்.

8—10—41 புதன்: மாலை 6 மணிக்கு காந்தி சதுக்கத்தில் பொதுக்கூட்டம். பரிசு வழங்குதல்.

காந்தி யடிகளுக்கு நூல் பரிசு அளிக்க விரும்புவோர் செயலாளரிடம் கொடுக்கும்படி கேட்டுக்கொள்ளப் படுகிறது.

## தந்திச் செய்தி

### ரெங்கூன் மார்க்கெட்

ரங்கூன் அக். 1உ

| | |
|---|---|
| ஙசேன் நெல் | 160/162 |
| மீடோன் ஷை | 168/170 |
| சுகந்தி வெள்ளை அரிசி 35% | 455/460 |
| ஷை 25% | 465/470 |
| வுவேபோ லொவ்ந்தே | 465/510 |
| ஙசேன் காலி | 385/395 |
| ஙஸேன் ஜி | 425/430 |
| புழுங்கல் | 430/435 |
| முழுப்புழுங்கல் | 387/8-390 |

### கொழும்பு மார்க்கெட்

கொழும்பு, செப். 29உ

| | |
|---|---|
| கிரேப் ரப்பர் | 57 சதம் |
| ஷீட் ,, | 55⅝ ,, |

கொப்பரா

| | |
|---|---|
| முதல் தரம் - | ரூ. 32·75 |

### சிங்கப்பூர் ரப்பர்

செப். 27உ

புகை போட்டது ஸ்டாண்டர்டு ஒரு பீக்கல் ஐம்பத் தொரு வெள்ளி நாற்பத்து நாலு காசு.

### சென்னை மார்க்கெட்

சென்னை, செப். 30உ

| | | | |
|---|---|---|---|
| சவரன் (மொத்த விலை) | 28 | 9 | 3 |
| சவரன் (சில்லரையில்) | 28 | 9 | 9 |
| மூசை தோலா 1க்கு | 41 | 11 | 0 |
| வெள்ளி ரெடி 100 தோலா | 63 | 12 | 0 |
| வெள்ளி ரூபாய் எடை | 0 | 10 | 6 |

### மகாத்மாவுக்கு வாழ்த்து

ஸ்ரீ ஹரிதயாளர் செய்தி

வங்காளத்திலுள்ள வயோதிகரான காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ ஹரிதயாள நாத் காந்தி ஜயந்தியை முன்னிட்டு மகாத்மாவுக்கு அனுப்பிய ஒரு கடிதத்தில், "உத்தமர்களுக்கு நல் வாழ்வு அளிக்கும் அஹிம்ஸையும் சத்தியமும் வெற்றியுற வேண்டுமானால், சாதுக்கள் சாந்தியுடன் வாழ வேண்டுமானால் தாங்கள் பலநாள்வாழ்ந்திருக்கவேண்டியது அவசியம்; ஆகவே மற்றவர்களின் பிறந்த நாளைவிடத் தங்களின் பிறந்த நாள் மிக விசேஷ முடையதாகும். அஹிம்ஸை மூலமாகவும், சத்தியத்தின் மூலமாகவும் உலகுக்கு ஒரு சாந்தியை அளிக்க தாங்கள் மேற்கொண்டுள்ள முயற்சி பலிக்க நீண்ட ஆயுளையும் ஆற்றலையும் ஆண்டவன் அளிக்க வேண்டுமென நான் பிரார்த்திக்கிறேன்" என்று குறிப்பிட்டிருக்கிறார்.

### சென்னையில் ஸ்ரீமான் ஜெயகர்-பிரசங்கம்

சென்ற செவ்வாய் மாலை சென்னை சன் தியேட்டரில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் "தற்கால ராஜீய நிலைமை" என்பது பற்றி ஸ்ரீமான் எம். ஆர். ஜெயகர் பேசினார். ஸ்ரீமான் எம். ஸி. ராஜா தலைமை வகித்தார். தியேட்டருக்கு உள்ளும் புறமும் கூட்டம் கூடி யிருந்தது. காங்கிரஸின் தற்காலக் கொள்கை மாற வேண்டுமென்றும், வேற்றுமை வளர்ப்பது பிரிட்டிஷ் சர்க்கார்தானென்றும், சமீபத்தில் அமெரிக்கர் சிலருக்கு அமெரி விடுத்த பதில் பூராவும் உண்மையல்ல வென்றும், மாகாணங்களில் தனிமனிதன் ஆட்சி ஒழிந்து ஜனநாயக ஆட்சி ஏற்படவேண்டுமென்றும் அவர் தமது பேச்சில் குறிப்பிட்டார்.

### கடலிலிருந்து தங்கம்

லாரெண்டிக் என்னும் கப்பல் சென்ற மகா யுத்தத்தின்போது 5,000,000 பவுன் பெறுமான தங்கத்துடன் அயர்லாந்துப் பக்கம் செல்லுகையில் மூழ்கியது. அதில், 4958,708 பவுன் மதிப்புள்ள தங்கம், 1917 முதல் 1924 வரை சமுத்திரத்திலிருந்து எடுக்கப்பட்டுவிட்டதாம். இது வரை தங்கத்தை சமுத்திலிருந்து எடுக்க முயற்சித்ததில் இது ரொம்ப அபூர்வமான வேலையாம்.

## இந்தியா—பிரிட்டன் தகராறு

### நீக்குவதற்கு ஸ்மட்ஸ் முயற்சிக்க வேண்டும்

இப்பொழுது பிரிட்டனுக்கும் தேசிய இந்தியாவுக்கும் ஏற்பட்டிருக்கும் பிளவை அகற்ற வழிகாண மார்ஷல் ஸ்மட்ஸ் சமரச தூதாக முன்வந்து முயற்சி செய்யவேண்டுமென்று ஒரு பிரபல தென் ஆப்பிரிக்க இந்தியர், மார்ஷல் ஸ்மட்ஸுக்கு கடிதம் எழுதியிருக்கிறார்.

### இந்தியப் பருத்தி

இந்தியாவில் உற்பத்தியாகும் மூலப்பொருள்களில் பருத்தி தான் மிகவும் முக்கியமானது. அதன் மூலம் இந்நாட்டுக்கு அதிகப் பணம் கிடைக்கிறது. உலகிலே பருத்தி விளைவிக்கும் தேசங்களில் இந்தியா இரண்டாவது ஸ்தானம் வகிக்கிறது. 400 பவுண்டு நிறையுள்ள கட்டுகள் சுமாராக 70 லக்ஷம் பேல் வரை வருஷா வருஷம் இங்கு உற்பத்தியாகிறது. இதில் பாதி ஏற்றுமதி செய்யப்படுகிறது. இதன் விலை ரூபாய் 24·99 முதல் 31.04 லக்ஷம் வரை மதிப்பிடப்படுகிறது.

### இந்தோ—பர்மா ஒப்பந்தம்

இந்தியா—பர்மா ஒப்பந்தத்தைப் பற்றி பர்மாப் பிரதம மந்திரி மகாத்மா காந்திக்கு ஒரு கடிதம் எழுதியிருப்பதாகத் தெரிகிறது. காந்திஜி இந்த ஒப்பந்தத்தைப் பலமாகக் கண்டித்து வெளியிட்ட அறிக்கையைக் கண்டே பர்மா சர்க்கார் நிலைமையை விளக்க அவர் கடிதம் எழுதி யிருக்கவேண்டும் என்று கருதப்படுகிறது.

வெளிநாட்டு இந்தியர் இலாகாத் தலைவராக வைஸ்ராய் நிர்வாக சபைக்கு நியமிக்கப்பட்டிருக்கும் ஸ்ரீமான் ஆனேயும் வைஸ்ராய்க்கு முக்கியமான அறிக்கை ஒன்றை அனுப்பி யிருப்பதாகத் தெரிகிறது.

### இந்திய—இலங்கை ஒப்பந்தம்

இந்திய—இலங்கை உறவு சம்பந்தமாகச் சமீபத்தில் ஏற்பட்ட நகல் ஒப்பந்தம் அக்டோபர் 6-ந் தேதி நடக்க இருக்கும் நிரந்தரக் கமிட்டிக் கூட்டத்தில் சமர்ப்பிக்கப்படு முன், பொது ஜனங்களின் அபிப்பிராயத்தை அறிய அதை வெளியிட வேண்டுமென கனம் வாஜ்பேயருக்கு இந்திய வியாபாரச் சங்கச் சம்மேளனக் கமிட்டியினர் ஒரு தந்தி அனுப்பி யிருக்கின்றனர்.

### தமிழ் இசை மகாநாடு, தேவகோட்டை

தேவகோட்டையில் அக்டோபர் 25, 26ந் தேதிகளில் திரு. டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்கள் தலைமையில் தமிழ் இசை மகாநாடு நடைபெறும் என்றும், கனம் டாக்டர் ராஜா சர் அண்ணாமலை செட்டியாரவர்கள் மகாநாட்டைத் திறந்துவைக்க இசைந்துள்ளார்கள் என்றும் அதை யொட்டி தமிழ் நாட்டின் முக்கிய தமிழறிஞர்களும், இசைவாணர்களும் கலந்து கொள்வார்கள் என்றும் செயலாளர்கள் அறிவிக்கிறார்கள்.

### சிங்கப்பூர்—அமெரிக்கா விமானப் போக்கு வரத்து

சிங்கப்பூர்—அமெரிக்க (பசிபிக் சமுத்திரம் மூலமாக) விமானப்போக்குவரத்தில் இம்மாதம் முதல் தேதியிலிருந்து ஒரு மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. மேற்படி விமானப் போக்குவரத்து இனி வாரம் ஒரு தடவை நடக்கும். முன்பு இரண்டு வாரங்களுக்கு ஒரு முறைதான் இருந்தது. சிங்கப்பூர்—மணிலா, மணிலா—ஹாங்காங் இவற்றிடை போகும் விமானப் போக்கு வரத்தை அதிகரிக்கும்படி யுனைடெட் ஸ்டேட்ஸ் விமானப்போக்குவரத்து போர்டுக்கு மனுச் செய்து கொள்ளப் பட்டிருப்பதாகத்தெரிகிறது.

## பர்மா அரிசி ஏற்றுமதிக் கட்டுப்பாடு

★

பர்மா அரிசி ஏற்றுமதியைக் கட்டுப்பாடு செய்ய பர்மா சர்க்கார் தீர்மானித்திருப்பதால் ஏற்பட்ட நிலைமைபற்றி இந்திய வியாபாரிகளுடன் கலந்துபேச பர்மாவிலுள்ள அரிசி வியாபாரிகள் இங்கு வருவார்களாம். பர்மா சர்க்கார் நியமிக்கும் ஏற்றுமதி கண்ட்ரோலரோ அல்லது அவரது அனுமதியுடனேதான் அரிசியை ஏற்றுமதி செய்ய முடியும் என்று தெரிகிறது. பர்மாவிலுள்ள அரிசி வியாபாரத்தில் பாதி இந்தியர் வசமிருப்பதாகக் கூறப்படுகிறது. கட்டுப்பாடு அமுலுக்கு வந்தால், இந்தியரின் நலன்கள் பாதிக்கப்படுமென்றும், இந்தியாவிலுள்ள கண்ட்ரோலர் வியாபாரிகளிடமிருந்து ஆர்டர்களை ஒன்று சேர்த்து பர்மாவிலுள்ள கண்ட்ரோலருக்கு அனுப்புவாரென்றும், அந்த அதிகாரி சரக்குகளை வாங்கி அனுப்புவரென்றும், விலையை நிர்ணயிக்கும் பொறுப்பு கண்ட்ரோலருக்கு விடப்பட்டிருப்பதாயும், இது சரியான முறையல்லவென்றும் பர்மா வியாபாரிகள் அபிப்பிராயப்படுகின்றனராம். பம்பாய் வியாபாரிகளும் இத்திட்டத்தைப் பலமாக ஆட்சேபிக்கின்றனராம்.

இந்திய அரிசி உற்பத்தியில் 100-க்கு 5 வீதம் தான் பர்மாவிலிருந்து இறக்குமதி செய்யப்படுவதாயும், இதை அடியுடன் கைவிட்டு, இந்நாட்டிலேயே அதிகப்படி சாகுபடி செய்ய வகைகள் காண்பதற்காக ஒரு கமிட்டியை நியமிக்க வேண்டுமென்றும் வற்புறுத்தப்படுகிறது.

புயல் கொடுமையால் இலக்ஷத் தீவில் ஏற்பட்ட கொடுமைக்காக 3000 மூட்டை அரிசி அனுப்ப மலையாளம் ஜில்லா கலெக்டர் முடிவு செய்திருக்கிறார்.

## ராஜா ஸர் அவர்களின் சாந்தி நன்கொடைகள்

செட்டிநாட்டு ராஜா ஸர் அண்ணாமலை செட்டியாரவர்கள் தமது ஷஷ்டியப்த பூர்த்தியை முன்னிட்டு சுமார் 3½ லக்ஷம் ரூபாய் வரை பல ஸ்தாபனங்களுக்கும் நன்கொடை வழங்கியுள்ளார்களென்று தெரிகிறது. அவற்றுள் சில கீழே குறிக்கப்பெறுகின்றன:-

| | |
|---|---|
| டவுன் கிளப், கானாடுகாத்தான் | 16,101 |
| இளைஞர் சங்கம், ஷை | 1,001 |
| நாட்டுக்கோட்டை செட்டியார் கிளப், காரைக்குடி | 11,101 |
| ஷை மெம்பர்ஷிப் | 4,000 |
| ஹிந்துஸ்தான் ஸ்கவுட் அசோசியேஷன் செட்டிநாடு வட்டாரம், காரைக்குடி | 4,001 |
| 'செட்டி நாடு' வாரப்பதிப்பு | 1,000 |
| மகளிர் இல்லம், அமராவதிபுதூர் | 1,001 |
| தமிழ் இசை வளர்ச்சிக்கு (மீண்டும்) | 15,000 |
| அண்ணாமலை யூனிவர்சிடியின் வெளியீடத்தை அபிவிருத்தி செய்ய | 5,000 |
| வருஷாந்திர பரிசுகளுக்கு கனம் ஜெயகர் பெயரால் | 1,000 |
| யூனிவர்சிடியில் மாணவ மாணவியர்க்கு வாசகசாலைகள் அமைக்க | 15,000 |
| ராமசாமி செட்டியார் டவுன் ஹைஸ்கூல் (சிதம்பரம்) பரிசுக்காக மூலதனம் | 2,000 |
| அண்ணாமலை நகர் ஸ்ரீ மீனாக்ஷி எலிமெண்டரி பள்ளிக்கூடக் கட்டிடத்திற்காக | 6,000 |

## அரசியல் கைதிகளின் விரல் அடையாளம்

★

### வாங்கவேண்டாமென சர்க்கார் உத்தரவு

அரசியல் குற்றங்களுக்காகத் தண்டிக்கப்பட்டவர்களின் விரல் அடையாளங்களைச் சிறைகளில் எடுப்பது பற்றி சர்க்கார் ஆலோசனை செய்து வருகின்றனர். இப்பொழுது இது சம்பந்தமாக சர்க்கார் ஒரு ரகசிய உத்தரவு வெளியிட்டிருக்கின்றனர். அதன் சாராம்சத்தைச் சர்க்கார் வெளியிட்டிருக்கின்றனர்.

அரசியல் குற்றங்களுக்காகத் தண்டிக்கப்படுகிறவர்களின் விரல் அடையாளங்களைச் சிறையில் வாங்கக்கூடாது; ஆனால் குற்றம் செய்வதற்கு உதவியாகப் பல பெயர்களுள்ளவர்கள், முன்பு நன்னடத்தையற்ற முறையில் நடந்துகொண்டிருப்பவர்கள், இவர்களது விரல் அடையாளங்களை ரிகார்டுக்கு அவசியமானால் அவர்கள் கைது செய்யப்பட்டவுடன் வாங்கலாம். ஆனால், சிறையில் வாங்கக்கூடாது.

மேற்படி உத்தரவு சில மாத காலமாகவே அமுலிலிருந்து வருகிறது.

### குவெட்டாவில் பூகம்பம்

**40 ஆயிரம் ரூபாய்வரை சேதம்**

குவெட்டாவில் சென்ற செப். 29-ந் தேதி காலை முதல் மாலை வரையில் சுமார் 18 தடவைகள் பூமி அதிர்ச்சி ஏற்பட்டது. அதிர்ச்சி சுமார் 35 வினாடிகள் இருந்தது. மின்சார விசிறிகள், தந்தி, டெலிபோன் கம்பிகள் தடைபட்டன. நடுநிசி 1-20 மணிக்கு மறுபடியும் அதிர்ச்சி யேற்பட்டது. இரவு நான்கு தடவை அதிர்ச்சியிருந்தது. இதனால் இதுவரையில் 40 ஆயிரம் ரூபாய் சேதமேற்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

## காரைக்குடி நகர சபைக் கூட்டம்

### கூட்டம் செல்லாது என்ற ஆட்சேபனை தள்ளுபடி

காரைக்குடி நகர சபையின் சாதாரணக் கூட்டம் ஒன்று சென்ற செப். 27-ட சனிக்கிழமை மாலை 5-மணிக்கு சேர்மன் ஸ்ரீமான் சி. முரு. நாராயணன் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. 10 அங்கத்தினர்கள் விஜயம் செய்திருந்தனர்.

சட்டப்படி மூன்று முழு நாட்களுக்கு முன் அஜெண்டா சார்வு செய்யப்படாததால் கூட்டம் செல்லுபடியாகாது என்று ஸ்ரீ T. பார்த்தசாரதி அய்யங்கார் நடவடிக்கை ஆரம்பமாவதற்குச் சற்று முன் ஒரு பிரேரணை கொண்டு வந்தார். ஸ்ரீ சுப்பையா அம்பலம் தீர்மானத்தை ஆமோதித்தார். பெரும்பாலரான கவுன்ஸிலர்களுக்கு சட்டப்படிக்குள்ள கால அளவிலேயே அஜெண்டா சார்வு செய்யப்பட்டிருப்பதால் மீட்டிங்கைத்தொடங்கி நடத்தலாம் என்று சேர்மன் அவர்களால் ஒரு ரூலிங் கொடுக்கப்பட்டு கூட்டம் ஆரம்பிக்கப்பட்டது.

கீழ்க்கண்ட முக்கிய விஷயங்கள் அப்போது ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டன.

#### கொசு ஒழிப்பு வேலைக்குப் பயிற்சி

கொசு ஒழிப்பு வேலையில் பயிற்சி பெற பிரதி வருஷமும் முனிஸிபாலிட்டி தன் செலவில் எத்தனை பேரை அனுப்பக்கூடும் எனச் சென்னை சர்க்காரின் சுகாதார டைரெக்டர் ஒரு சுற்று அறிக்கை அனுப்பி யிருந்தார். மேற்படி பயிற்சிக்கு ஒரு நபரை அனுப்பலாமென்று கவுன்ஸில் தீர்மானித்தது.

#### நடை பாதைகள்

ரயில்வே பீடர் ரோடில் (முனிஸிபல் ஆபீஸிலிருந்து ரயில்வே ஸ்டேஷன் வரை) உயரமான நடைபாதை போடுவதற்கும், (எஸ்டிமேட் ரூ 3395) கல்லுக்கட்டியைச் சுற்றியுள்ள நான்கு தெருக்களுக்கும், கோவிலூர் ரோடு உள்பக்கத்திலும் சிமெண்டு நடைபாதை போடுவதற்கும் (எஸ்டிமேட் ரூ 1960) கவுன்ஸில் அனுமதி தந்தது. இன்னும் சில மாமூலான விஷயங்கள் எடுத்துக் கொள்ளப்பட்டன.

அன்று எடுத்துக்கொள்ளப்படவிருந்த சப்ளிமெண்டரி அஜெண்டா (இரண்டு)விலுள்ள விஷயங்கள் ஒத்திவைக்கப்பட்டன.

### கோதுமை வரி குறைக்கப்பட்டது

கோதுமை இறக்குமதி வரி அந்தருக்கு ரூ 1—8—0 லிருந்ததில் 2 அணா குறைத்திருப்பதாக இந்திய சர்க்கார் தெரிவித்திருக்கின்றனர்.

### இந்திய சுய ஆட்சி அபிவிருத்தி பற்றி லண்டன் புரபஸர் ஆராய்ச்சி

யுத்தத்துக்கு முன் ஆக்ஸ்போர்டு கலாசாலையில் அரசியல், பொருளாதார விஷயங்களை ஆராய நியமிக்கப்பட்டுள்ள புரபஸர் ஆர். கூப்லானட், இந்தியாவில் சுய ஆட்சி அபிவிருத்தி பற்றி பரிசீலனை செய்ய இசைந்துள்ளார்.



## "ரஷ்யாவை அற்ப சொற்பமாய் நினைக்கவேண்டாம்"

### ஜெர்மன் எஞ்சினியர் எச்சரிக்கை செய்கிறார்

ப்ரொபஸர் ஜார்ஜ் ஷலீஸிங்கர் என்பவர் மிகப் பிரசித்திவாய்ந்த ஜெர்மன் எஞ்சினியர்களுளொருவர். ரஷ்ய ஆயுதத் தொழிலை அமைத்துக்கொடுத்தவர் அவர்தான். அவர் ரஷ்யாவுக்குத் தாக்குப்பிடிக்கும் சக்தி எவ்வளவிருக்கிறதென்பதைப்பற்றி லண்டன் ரேடியோ மூலம் ஜெர்மானியருக்கு எச்சரிக்கை விடுத்திருக்கிறார். அவர் மிகவும் அழுத்தந் திருத்தமாக ஆவேசத்தோடு பேசியதால் அந்தப் பேச்சுக் கேளாதபடி தடுக்க ஜெர்மானியர் செய்த கோளாறுகள் பயன்படவில்லை.

அந்த எஞ்சினியர் விடுத்த எச்சரிக்கை யாவது:—

"ரஷ்ய யுத்தத் தொழில்கள் அரைகுறையானவை என்று மனப்பால் குடித்திருக்க வேண்டாமென்று உங்களை எச்சரிக்கை செய்கிறேன். இந்த மூன்று மாதத்தில் ரஷ்யத் தொழில்களில் முக்கியமானவற்றைக் கைப்பற்றிவிட்டதாக நினைக்கவேண்டாம். ரஷ்ய யுத்தத் தொழில் நிலையங்களில் பெரும்பாலானவை மேற்றிசையினின்று வெகு தூரத்திலே அமைக்கப்பட்டிருக்கின்றன என்பது எனக்குத் தெரியும்.

"ரஷ்யா தனது அற்புதமான ஆயுதத் தொழிலை அமைப்பதற்கு உதவி செய்தவர்கள் ஜெர்மன் சர்க்காரும் ஜெர்மன் நிபுணர்களுந்தான்.

"லெனின்கிராடிலும் சாகோவிலும் இன்னும் எங்கெங்கே நிறுவத் திட்டம் போட்டிருந்தார்களோ அங்கெல்லாம் யந்திரக் கருவிகள் செய்வதற்கான தொழிற்சாலைகள் அமைப்பது பற்றி ஆலோசனை கூறும்படி எனக்கு உத்தரவிடப்பட்டது. டீஸெல் யந்திரங்களும், சாமான் வண்டிகளும், பீரங்கிகளும், பீரங்கி குண்டுகளும் உற்பத்தி செய்வதற்குத் திட்டங்கள் போடப்பட்டன. இதற்கெல்லாம் வேண்டிய யந்திர தளவாடங்களில் நூற்றுக்கெண்பது பங்குக்கு ஜெர்மன் சர்க்காரே பொருளுதவி யளித்தார்கள்."

ப்ரபெஸர் ஷலீசிங்கரின் பேச்சின் கடைசியில் ஆவேசம் அதிகமாயிற்று. அவர் பின்னும் கொஞ்சம் அழுத்தமாக இதைச் சொன்னார்: "ஒத்துழைப்பு ஒத்துழைப்பு என்று ஜெர்மன் ராணுவ அதிகாரிகள் வற்புறுத்தினார்கள். 1936ல் மிகவும் முக்கியமான புதிய தொழிற்சாலைகளிரண்டுக்கு நான் போய்ப் பார்த்தேன். அவைகளுள் ஒன்று 3000 தொழிலாளிகள் வேலை செய்யும் யந்திரக்கருவி உற்பத்திசாலை, எந்த ஜெர்மன் தொழிற்சாலை இதற்கு வேண்டிய யந்திரங்களையெல்லாம் கொடுத்ததோ அதைவிட அதிகமாக உற்பத்தி செய்துகொண்டிருந்தது."

ரஷ்யர்களின் திறமையை, முக்கியமாய் யந்திர நுட்பங்களில் பெண்களுக்குள்ள திறமையை, அந்தப் ப்ரபஸர் பெரிதும் பாராட்டினார். ரஷ்யத் தொழிற்சாலைகளில் பெண்கள் எத்தனையோ வருஷமாக வேலை செய்து வருகிறார்கள்.

### 10,000 சீப்புகள் சப்ளை

சீக்கிய சோல்ஜர்கள் வெளிநாடுகளில் தைரியமாக போராடுவதைப் பாராட்டி- சீக்கிய கல்ஸா தர்பார் 10,000 சீப்புகள் இனாமாகச் சப்ளை செய்யத் தீர்மானித்திருக்கிறார்கள்.

### கைத்தறி ஜமக்காளங்களுக்கு ஆர்டர்

இந்தியப் பண்டசாலை இலாகா 6,28,000 கைத்தறி ஜமக்காளங்கள் சப்ளை செய்ய, இந்தியாவின் பல மாகாணங்களுக்கு ஆர்டர் வந்திருக்கின்றன. அடுத்த வருடம் மார்ச் மாதத்திற்குள் இந்த ஆர்டர்களை மாகாணங்கள் நிறைவேற்றவேண்டும்.

### பர்மாப் பிரதம மந்திரி

#### இங்கிலாந்துக்குப் பயணம்

பிரதம மந்திரி கனம் யூஸா மந்திரி சபைக் காரியதரிசி ஸ்ரீ யூ டின் என்பவருடன் இங்கிலாந்துக்கு, சென்ற செப். 24-ந் தேதி பயணமாகி விட்டார் எனத் தெரிகிறது. பல பிரபலஸ்தர்களும், மந்திரிகளும், சட்டசபை மெம்பர்களும், அதிகாரிகளும் ஏனையோரும் அவரை உற்சாகமாக ரங்கூன் துறைமுகத்திலிருந்து வழியனுப்பினர்.

### இந்திய இலங்கை வியாபாரம்

#### கனம் முதலியார் தலைமையில் தூது

இந்தியாவுக்கும் இலங்கைக்கும் இடையே வியாபார சம்பந்தமாக ஒரு ஒப்பந்தம் சமீபத்தில் ஏற்பட்டிருக்கிறது; இதைப்பற்றிய சம்பாஷணை மேற்கொண்டு இந்தியா சட்டசபைக் கூட்டம் முடிந்தபின் நடக்கும். அப்போது கனம் ஏ. ராமசாமி முதலியார் தலைமையில் வியாபாரத் தூதுக்கோஷ்டி யொன்று இலங்கைக்குச் செல்லும் எனத் தெரிகிறது.





## காரைக்குடி

### செட்டியார்கள் நல உரிமைச் சங்கம்

மாகாண பாட்மின்டன் டபிள்ஸ் ஆண்டு சிங்கிள்ஸ் போட்டிப் பந்தயம் அக்டோபர் மாதம் முதல் வாரத்திலிருந்து ஆரம்பிக்கப்பெறும் என்றும், செட்டிநாடு ரவுண்டு, பிரெஸிடென்ஸி ரவுண்டு என இருவகையான போட்டிகள் தனித் தனியே நடத்தப்படும் என்றும் அரு. அருணாசலன் கன்வீனர், டோர்ணமெண்டு கமிட்டி C. W. A. தெரிவித்துக்கொள்ளுகிறார்.

### பாரதி குரூப்

25-9-41 இரவு விவேகானந்த விலாஸில் திரிசாரணத் தலைவர் ஸ்ரீ அரு. அருணாசலன் தலைமையில் குரூப் கவுன்ஸில் கூட்டம் நடைபெற்றது. புது வருடத்திற்கு, திரிசாரணத் தலைவர்: ஸ்ரீ சு. ரும். பழ. திருப்பதி உதவித் தலைவர்; ஸ்ரீ மெ. சு. தி. தண்ணீர்மலை செட்டியார், காரியதரிசி ஸ்ரீ சுப. மெய்யப்பன். பொக்கிஷதார்; ஸ்ரீ மெ. மெய்யப்பன், க்வார்டர் மாஸ்டர் ஸ்ரீ அரு. அருணாசலன் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பெற்றனர்.

### மூன்றாவது ஆண்டு விழா

25-9-41 மாலை 4 மணிக்கு கா. முத்துப்பட்டணம் தண்ணீர்மலை பில்டிங்கில் ஸ்ரீ ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள் தலைமையில் விழா நடைபெற்றது. நகர சுகாதார அதிகாரி வி.சு. நடராஜன், செட்டி நாடு ஆசிரியர் A. S. சர்மா, S. வஜ்ரவேல் ஆகியோர்கள் சொற்பெருக்காற்றினார்கள். அன்று இரவு விவேகானந்த விலாஸில் அரு. அருணாசலம் அவர்களால் அங்கத்தினர்களுக்கு விருந்து ஒன்று அளிக்கப்பெற்றது.

இந்தியச் சர்க்கரை ஸிண்டிகேட் டைரெக்டர்கள் போர்டின் கூட்டம் அக்டோபர் 6-ந் தேதி கைனிடாலில் நடக்கும்.

## பொருள்களைப் பார்வையிடுவதேன்?

### தொழில்களுக்கு அத்தியாவசியமான உதவி

யுத்தப் பொருள்களின் சப்ளை விஷயத்தில் அவைகளைப் பரிட்சித்துப், பார்வையிடுவதும் அத்தியாவசியமாகும். இந்த வேலையை வியாபாரச் சரக்குகள் விஷயத்திலெல்லாம் இந்திய ஸ்டோர்ஸ் இலாகாகாரரும், ஆயுதங்கள் விஷயத்தில் ஆர்ட்னன்ஸ் மாஸ்டர் ஜெனரலின் கீழுள்ள ராணுவ சம்பந்தமான பார்வையிடும் ஸ்தாபனங்களைச் சேர்ந்தவரும் செய்து வருகிறார்கள். சரக்குகளின் பாகங்கள் அவைகளின் அமைப்பு, உபயோகம் எல்லாம் இருக்க வேண்டியபடி இருக்கின்றனவா என்று கண்டறிவதற்காக அவைகளைப் பார்வையிட்டு அல்லது பரிட்சித்துத்தான் ஆகவேண்டும்.

தொழில்கள், வியாபாரங்கள் இவற்றின் நன்மையைக் கருதியும் சரக்குகள் சீக்கிரமாக சப்ளையாக வேண்டுமென்பதற்காகவும் இந்திய ஸ்டோர்ஸ் இலாகாவிலிருந்தும் ஆர்டனன்ஸ் டைரெக்டரேட்டிலிருந்தும் எடுக்கப்பட்ட இன்ஸ்பெக்டர்கள் பலர் ஒவ்வொரு நாளும் இந்தியாவின் சகல பாகங்களிலும் பல்வேறு பொருள்களை ஆயிரக் கணக்கில் பார்வையிட்டு வருகிறார்கள். ஏதேனும் குற்றங்குறை இருந்தால் அதை உற்பத்தியாளர்களுக்கு எடுத்துக் கூறுகிறார்கள். அவர்கள் அதை நீக்க முடிகிறது. இதனால் ஏராளமான பொருள்கள் அங்கீகரிக்கப்படாமல் திரும்புவது தவிர்க்கப்படுகிறது.

இந்திய ஸ்டோர்ஸ் இலாகாவுக்குக் கல்கத்தா, ஜாம்ஷெட்பூர், பம்பாய், சென்னை, கான்பூர், லாஹூர், கராச்சி ஆகிய இடங்களில் பார்வையிடும் ஸ்தாபனங்களிருக்கின்றன. பார்வையிடும் வட்டங்களைச் சேர்ந்தவர்கள் தீர்ந்த பொருள்களை மட்டுமன்றி அவைகள் தயாரிப்பதற்கு உதவும் சரக்குகளையும் பார்வையிடுகிறார்கள். அலிப்பூரிலுள்ள சர்க்கார் பரிட்சை ஸ்தலத்தில் ரசாயனப் பரிட்சைகளும் பௌதிகப் பரிட்சைகளும் பொருள்களைப் பிரித்தாராயும் வேலைகளும் செய்து கொடுக்கிறார்கள்.

ஜாம்ஷெட்பூரிலுள்ள ஸ்தாபனத்துக்கு 'மெடல்லர்ஜிகல் இன்ஸ்பெக்டரேட்' (உலோக வேலைகளைப் பார்வையிடும் ஸ்தாபனம்) என்று பெயர். டாடா இரும்பு எஃகு கம்பெனியில் உற்பத்தியாகும் பொருள்களைப் பார்வையிடுவதுதான் இதன் முக்கிய வேலை. ஆனால் இதர பரிட்சைகளும் இங்கே நடத்தப்படுகின்றன.

காஸாலிலுள்ள ராணுவ உணவு ஆராய்ச்சி ஸ்தாபனத்தில் உணவுப் பொருள்கள் ஆராயப்படுகின்றன.

சப்ளை டைரெக்ட்ரேட்டிலுள்ள ஜவுளிகள் சம்பந்தமான டைரெக்ட்ரேட்டைச் சேர்ந்த பரிட்சிக்கும் பிரிவும் கொள்வினைப் பிரிவும் சென்ற வருஷம் பம்பாய்க்கு மாற்றப்பட்டிருக்கின்றன. ஜவுளித் தொழில்காரர்கள் அதற்கு முன், மாதிரிகளைப் பரிட்சிப்பதற்காகக் கான்பூருக்கு அனுப்பவேண்டியிருந்தது. இந்த விதத்தில் அவர்களுக்கு ஒத்தாசை செய்வதற்காகத்தான் இப்படி இந்தப் பிரிவுகள் மாற்றப்பட்டன.

பார்வையிடும் வேலை ஒரே மாதிரியாய் நடக்கும் பொருட்டு இந்தியன் ஸ்டோர்ஸ் இலாகாவைச் சேர்ந்த பார்வையிடும் ஸ்தாபனம் அதினின்றும் விலக்கப்பட்டு, எஞ்சினியரிங் இன்ஸ்பெக்டரேட், ஜவுளிகள், பொதுச் சரக்குகள் சம்பந்தமான இன்ஸ்பெக்டரேட் என்னும் இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

---

### பனை [பாம்] எண்ணெய்க்குப் பர்த்தி

வெளியிலிருந்து இறக்குமதி செய்யப்படும் பனை [பாம்] எண்ணெய்க்குப் பர்த்தி ஹைட்ரஜன் வாயு கலந்த பருத்தி எண்ணெயைத் தாராளமாக உபயோகிக்கலாம் என்று விஞ்ஞான கைத்தொழில் ஆராய்ச்சி டைரக்டர் தெரிவிக்கிறார். இது இந்தியாவில் சுலபமாகக் கிடைக்கிறது.

இப்பொழுது நாட்டில் பனை [பாம்] எண்ணெய் குறைவாக இருப்பதால் அக்குறையை இது நீக்கிவிடும்.

## இந்தோ-சீனாவில் ஜப்பானின் ஆயுதங்கள், துருப்புகள்

### துருப்புகள் மெதுவாய் உள்ளே புகுகின்றன

பிரசித்தி பெற்ற அமெரிக்க யுத்த நிருபரான லீலண்ட் ஸ்டோவ் இப்போது தூரக் கிழக்குத் திசையிலிருக்கிறார். அவர் நேரில் கண்டு அனுப்பிய பின்வரும் செய்தி செப்டம்பர் 19௳ டெய்லி டெலக்ராப் பத்திரிகையில் பிரசுரமாயிருக்கிறது.

"ராணுவ முறையில் தனக்குக் கிடைத்த ஆரம்ப அநுகூலங்களைப் பயன்படுத்திக்கொண்டு தயார் நிலையில் இருப்பதைவிட்டு, ஜப்பான் இந்தோ—சீனாவில் மிகவும் வியக்கத்தக்க முறையில் முன்னெச்சரிக்கையுடன் நடந்து வருகிறது. இதிலிருந்தே அந்நாடு தன்னுடைய பொருளாதாரக் கஷ்டங்களை உணர்ந்து, தூரக் கிழக்குத்திசையில் பிரிட்டனோடும் அமெரிக்காவோடும் சீக்கிரமாகப் போர் துவக்கத் தயாராயில்லை என்பது வெளியாகிறது.

இரண்டு வாரம் கம்போடியாவிலும் கொச்சின் சீனாவிலும் திரிந்து பார்த்த பிறகு எனக்குத் தோன்றிய முடிவுகள் இவை: இவ்விரண்டு பிரதேசங்களிலும்தான் ஜப்பானியப் படைகளில் பெரும் பான்மை வைக்கப்பட்டிருக்கின்றன. ஜப்பான் தற்சமயம் கடுமையாகச் செய்திகளைத் தணிக்கை செய்து வருகிறது. இதற்கு இந்தோ-சீனாவின் பிரெஞ்சு அதிகாரிகளும் இணங்கிருக்க நிர்ப்பந்தம் உள்ளது. சைகோனிலிருந்து அனுப்பும் செய்திகளில் இந்தோ-சீனாவிலுள்ள ஜப்பானியப் படைகளைப்பற்றி ஒன்றும் காணமுடியாது. நான் அந்நாட்டைவிட்டு வெளிவந்துவிட்டபடியால் அங்குள்ள நிலைமையைப்பற்றிச் சொல்ல முடிகிறது.

#### நீண்டகாலத் திட்டம்

இந்தோ-சீனாவில் ஏராளமாக ஜப்பான், துருப்புகளைக்கொண்டு வைத்திருப்பதாக வெளியாகியிருக்கும் தகவல்கள் உண்மையில்லை என்பது முதலில் தெரியவேண்டும். தென் இந்தோ-சீனாவில் ஜப்பான் தன் துருப்புகளை இறக்க ஆரம்பித்து ஆறுவாரமாகிறது. இருந்தாலும் விச்சி சர்க்கார் ஒப்புக்கொண்ட தொகைக்கும் குறைவாகவே ஜப்பானியத் துருப்புகள் இறக்கப்பட்டிருக்கின்றன. நம்பத்தக்க தகவல்கள் மூலம் ஜப்பானியத் துருப்புகள் 40,000த்துக்கு மேலில்லை, என்று புலனாகிறது.

சைகோனுக்கு அப்பாலுள்ள விமானத் துறையிலும், கம்போடியாவின் தலைநகரமான ப்னும்பேனிலும், இன்னும் தெற்கே சில விடங்களிலும் ஜப்பானியர் துருப்புக்களுக்கு விடுதிகள் கட்டி வருகின்றனர். இது அவர்களுடைய நீண்டகாலத் திட்டத்துக்கு அறிகுறி எனலாம். இப்போது இரண்டே பகுதிச் சேனைகள் கொண்டு வரப்பட்டிருந்தாலும் இலையுதிர் காலத்துக்குள் இன்னும் எட்டுப் பகுதிகள் வந்து சேரலாம் என்று சில தகவல்கள் உள்ளன. எப்படியானாலும் இப்போதைக்கு ஜப்பானியர் தங்கள் முதல் பருவத்தை இன்னும் தாண்டவில்லை. இதற்கான ஆயத்தங்களும் மெதுவாகத்தான் நடக்கின்றன.

#### விமான பலம்

இந்தோ-சீனாவின் எட்டு விமானத் துறைகளிலுமாகச் சேர்ந்து 150-200 விமானங்களுக்கு மேல் ஜப்பானியர் வைத்திருக்க முடியாது. அவற்றில் 500 சைகோனில் இருக்கும் என்று தோன்றுகிறது. இங்கேயுள்ளவர்கள் பிரமிப்பதற்காக இந்த விமானங்கள் தினசரி பறந்து வட்டமிடுகின்றன. ஆனால் இந்தோ-சீனாவின் பல விமானத் துறைகள் வெடி விமானங்கள் இறங்க முடியாத சிறு துறைகள். லிம்ரிப்பைப் போல தாய்லந்து எல்லையில் உள்ள துறைகளை நவம்பர் கடைசி வரை மழைத் தொல்லையால் உபயோகிக்க முடியாது. ஆகையால் இன்னும் மூன்று மாதம் வரை ஜப்பானியரால் தாக்கக்கூடிய பெரிய விமானப் படை நிறுவமுடியாது. தாய்லந்துக்கு எதிராய் இந்தோ சீனாவை உபயோகிக்க ஜப்பான் நிஜமாகவே எண்ணியிருந்தால் டோக்கியோவின் கெட்டித்தரை விமானத் துறைகளிலாவது பெரிய விமானப் படைகளை ஜப்பான் தயாராய் நிறுத்தி யிருக்கவேண்டும். அப்படியும் தெரியவில்லை. ஜப்பான் முன்னெச்சரிக்கையாக எட்டி நின்று விடுமோ என்னவோ?

#### புதிய அமெரிக்க மோட்டார் டிரக்குகள்

கம்போடியாவிலும் கொச்சின்-சீனாவிலுமுள்ள ஜப்பானியப் படைகளின் தளவாடங்கள் தரத்தில் மிக உயர்ந்தவை. அவர்களுடைய பீரங்கிகளையும் டாங்கிகளையும் கண்ணிலே காட்டுவதேயில்லை. ஆனால் ஆயிரக்கணக்கான புதிய மோட்டார் டிரக்குகள்-அநேகமாய் அமெரிக்காவில் செய்தவை—இங்கே கொண்டு வரப்பட்டிருக்கின்றன. பிரெஞ்சு சர்க்கார் போட்டிருக்கும் முதல்தர ரஸ்தாக்களில் ஜப்பானியத் துருப்புக்கள் மிக விரைவில் கடக்க முடிகிறது. சுமார் 10,000 துருப்புக்கள் ப்னும்பேனிலும், சுமார் 2000 லிம்ரிப்பிலும் வைக்கப்பட்டிருக்கின்றன. ஜப்பானியத் துருப்புகளின் நடத்தை முதல் மாதத்தில் அடக்கமாய்த்தானிருந்தது. ஆனால் இப்போது ஆங்காங்கே அவர்கள் கட்டுக்கடங்காமல் ஆர்ப்பாட்டம் செய்யவும் தொடங்கி விட்டார்கள். நான் சைகோனை விட்டுப் புறப்படுவதற்கு முன் நாலைந்து சச்சரவுகள் போலீஸ் பார்வைக்கு வந்தன. ஜப்பானிய சோல்ஜர்கள் சண்டை போட்டதில் இரு பிரெஞ்சுக்காரர்களும் இரு சுதேசிகளும் கடத்திச் செல்லப்பட்டு விட்டனராம்."

## இந்தோ—பர்மா ஒப்பந்தம்

### அக்டோபர் முதல் தேதி அமுலுக்கு வராது

சென்ற 25-9-41ல் பர்மா சர்க்கார் குடியேற்ற அதிகாரிகளாகத் தேர்ந்தெடுக்கப்பெற்ற 12 பேர்களை நியமனம் செய்து ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார்கள். அதில் இந்தோ—பர்மா ஒப்பந்தத்தின் நிர்ப்பந்தங்கள் அக்டோபர் முதல் தேதியிலிருந்து அநேகமாக அமுலுக்கு வராது என்று கூறப்பட்டிருக்கிறது.

---

### ஸ்ரீ கிருஷ்ணசாமி பாரதி விடுதலை

மதுரை ஸ்ரீ கிருஷ்ணசாமி பாரதி எம். எல். ஏ. யும் பெஜவாடா ஸ்ரீ நரசிம்மமும் சென்ற 24-9-41 ந்தேதி திருச்சி சிறையிலிருந்து தங்கள் தண்டனைக் காலம் தீர்ந்து விடுதலை செய்யப்பட்டனர். இவர்கள் இருவரும் 'ஏ' வகுப்பில் இருந்தவர்கள்.





## ஆபீஸுகளைக் காலி செய்யத் திட்டம்

### ரங்கூனில் ஏற்பாடு

நெருக்கடி ஏற்பட்டால் அப்பொழுது நகரிலுள்ள ஆபீஸுகளைக் காலி செய்யவும், சர்க்கார் ஆபீஸ்கள் பலவற்றை ரங்கூனுக்கு வெளியே அமைக்கவும் ஒரு திட்டம் வகுக்கப்பட்டிருப்பதாக பர்மா கெஜட் அறிவிக்கிறது. செகரடேரியட், ஹைகோர்ட்டு, ஜெனரல் போஸ்டாபீஸ் இவைகள் நகருக்கு வெளியேயுள்ள இடங்களில் அமைக்கப்படும்.

---

### கரியைக் கையிருப்பில் வைத்திருக்க சர்க்கார் யோசனை

யுத்தம் காரணமாக நெருக்கடியான நிலைமை ஏற்பட்டால், அப்பொழுது கைத் தொழில்களைப் பாதுகாப்பதற்காக நிலக்கரியையும் வீட்டுக் கரியையும் கையிருப்பிலே வைத்திருக்கும்படி யோசனை கூறி இந்திய சர்க்கார் பல்வேறு வியாபாரிகள் சங்கங்களுக்கும் தெரிவித்திருக்கிறார்கள்.

---

### ஆவினிப்பட்டி விவேகாநந்தர் கல்விக் கழகம்

இவ்வூர் விவேகாநந்தர் கல்விக் கழகத்தில் 7-10-41 செவ்வாய்க்கிழமை காலை 9-மணிக்கு மகாத்மா காந்தி அவர்களின் 73-வது பிறந்த தின விழா கோயம்புத்தூர் ராமகிருஷ்ண வித்யாலய அதிபரும் சிறந்த தேச பக்தருமான திரு. டி. எஸ். அவிநாசிலிங்கஞ் செட்டியார் எம். எல். ஏ. அவர்கள் தலைமையில் நடைபெறுவதோடு பிற்பகல் 5-மணிக்கு அவர்களின் தலைமையில் கீழச்சிவல்பட்டி மீனாட்சி சுந்தரேஸ்வரர் கலாசாலைக்கு முன்பு ஓர் பொதுக்கூட்டமும் நடைபெறும். அவ்வமயம் பல அன்பர்கள் பேசுவார்கள் எனக் கழக அமைச்சர் எழுதுகிறார்.

---

### ஆத்தங்குடி நேரு வித்தியாசாலை போட்டி விளையாட்டு

25-9-41 பிற்பகல் 2 மணிக்கு ஆத்தங்குடி நேரு வித்தியாசாலையின் 2-ம் வருட போட்டி விளையாட்டு விழா இராமநாதபுரம் ஜில்லாக் கல்வி அதிகாரி உயர்திரு M. D. பால் M. A. M.Sc. L.T. அவர்கள் தலைமையின்கீழ் நடைபெற்றது. அதிபர் ஸ்ரீமான் பெ. க. பெ. சி. செல்லப்ப் செட்டியார் அவர்களால் தலைவருக்கு வரவேற்புத்தாள் வாசித்தளிக்கப் பெற்றது. போட்டி விளையாட்டுக்களில் ரசமான ஹிட்லர் ஆட்டம் (ஹிட்லர் பொம்மையைக் கண்ணைக் கட்டிக்கொண்டு அடித்தல்) விளக்கெண்ணைக் கம்பம், உள்பட 30 அயிட்டங்கள் நடைபெற்றன. விளையாட்டுப் போட்டிகள் முடிந்தவுடன் தலைவர் முடிவுரையில் இந்த விளையாட்டுப்போட்டி மெச்சத் தகுந்த முறையில் ஹைஸ்கூல்களும் பின்பற்றக்கூடிய முறையில் அமைந்திருக்கிறதென்றும், இம் மாதிரிப் போட்டிகள் ஆரம்பப் பாடசாலைகளுக்கு அவசியம் எனவும் விளக்கினார்கள். மாணவிகளால் கும்மி கோலாட்டமும், மாணவர்களால் "புத்தர் உலகு காணல்" "ஆஷாடபூதி" அல்லது "ஏமாற்றும் வித்தை" முதலியனவும் நடித்துக் காட்டப் பெற்றன. பின்னர் தேவகோட்டை ஹைஸ்கூல் சரித்திர ஆசிரியர் ஸ்ரீமான் வி. சுப்பிரமணிய அய்யர் பி. ஏ., எல், டி. ஸ்ரீமான் சுப்புராம அய்யர் ஆகியவர்கள் "விளையாட்டுப் போட்டி அவசியமா?" என்பது பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். வெற்றிபெற்றவர்களுக்குத் தலைவரால் பரிசுகள் வழங்கியபின்னர் வந்தனோபசாரம் கூறப்பட்டுக்கூட்டம் கலைந்தது. இரவு தேநீர் விருந்துக்குப் பின்னர் விழா முடிவுற்றது. விழாவிற்கு ஆ. முத்துப்பட்டணம் லோகமாதா திரிசாரணர் படை சேவை செய்தது போற்றத் தகுந்தது.



ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேஸ்வராள் எலெக்டிரிக் பவர் கார்ப்பரேஷன் லிமிடெட், காரைக்குடி.

### நோட்டீஸ்

5—10—1941௳ ஞாயிற்றுக்கிழமை யன்று, தெற்கு மதுரை எலெக்ட்ரிக் சப்ளை கார்ப்பரேஷன் லிமிடெட், அவர்கள் சிவகெங்கை லைனில் சில அவசர வேலை பார்க்க வேண்டி யிருப்பதால், அன்று 8 மணி முதல் 12 மணி வரைக்கும், கரண்டை நிறுத்தப்படுமென்று தகவல் தெரிவித்திருக்கிறபடியால், அந்த சமயம் கரண்டு சப்ளை வராதென்று இதன் மூலம் எல்லா கன்ஸ்யூமர்களுக்கும் தெரியப்படுத்தியிருக்கிறது.

காரைக்குடி 1-10-1941 } மெ.செ.ச. சிதம்பரம் செட்டியார், மானேஜிங் டைரெக்டர்.



## கணக் கெடுத்த தூக்கம்

### காந்திஜி வாழ்க்கையில் ஒரு சம்பவம்

காந்திஜி தூக்கத்தை தன் இஷ்டப்படி கையாளுகிறார் என்பதாக ஸ்ரீ பிர்லா ஓரிடத்தில் பின் வருமாறு எழுதுகிறார்:

காந்தி—இர்வின் ஒப்பந்த சமயத்தில் என் வீட்டில் (ஸ்ரீ பிர்லா வீட்டில்) சில ஆங்கிலேயர்கள் காந்தியடிகளைச் சந்திக்க நிச்சயம் செய்திருந்தனர். நிச்சயப்பட்ட நேரத்துக்கு 15 நிமிடத்திற்கு முன்பு காந்திஜி வந்தார். 'நான் தூங்கவேண்டும், சிறிது தூங்கட்டுமா?' என்றார். 'தூங்க நேரமேது? '15 நிமிஷந்தானே இருக்கிறது' என்றேன். '15 நிமிஷங்கள் போதும்' என அவர் தெரிவித்தார். உடனே கட்டிலில் படுத்து ஒரு நிமிஷத்தில் ஆழ்ந்த நித்திரையிலாழ்ந்தார். 15 நிமிஷமானதும் தாமே விழித் தெழுந்தார். 'தங்களுடைய தூங்கும் சக்தி அற்புதமானது' என்று கூறினேன். 'என்றைய தினம் என் தூக்கம் என் வசத்திலில்லையோ அன்று என் முடிவு என்று அறி' என்றார்.

---

### தென் இந்திய ரயில்வே

#### கால அட்டவணையில் சில மாறுதல்கள்

1-10-1941 முதல் ரயில்வண்டிகள் போக்குவரத்தில் சில மாறுதல்கள் செய்யப்படுவதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது. அவற்றில் முக்கியமான சில வருமாறு:-

1-ம் நீர் இண்டோ-ஸிலோன் எக்ஸ்பிரஸ் இரவு 8-45க்கு சென்னையை விட்டுப் புறப்பட்டு மாலை 4-35க்கு தனுஷ்கோடி போய்ச் சேரும். ஷை 2ம் நீர் எக்ஸ்பிரஸ் பகல் 11-10-க்கு தனுஷ்கோடியிலிருந்து புறப்பட்டு காலை 6-35க்குச் சென்னை சேரும். 3-ம் நீர் தூத்துக்குடி எக்ஸ்பிரஸ் காலை 7-20-க்குத் திருச்சியை விட்டுப் புறப்பட்டு மாலை 4-10க்கு தூத்துக்குடி போய்ச் சேரும். 4-ம் நீர் தூத்துக்குடி எக்ஸ்பிரஸ் பகல் 10-55க்குத் தூத்துக்குடியிலிருந்து புறப்பட்டு மாலை 7-40க்குத் திருச்சி சேரும். 5 நீர் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் இரவு 7-55க்குச் சென்னையை விட்டுப் புறப்பட்டு மாலை 6-50க்குத் திருவனந்தபுரம் போய்ச் சேரும். 6 நீர் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் காலை 7-55க்குத் திருவனந்தபுரத்தை விட்டுப் புறப்பட்டு காலை 7-க்குச் சென்னை சேரும். இப்போது அரியலூருக்கும் மானாமதுரைக்கு மிடையே ஓடிக் கொண்டிருக்கும் 31, 32ம் நீர் வண்டிகள் காரைக்குடிக்கும் மானாமதுரைக்கு மிடையே ஓடுவது ரத்து செய்யப்படும்.

---

### தாகூர் ஞாபகார்த்த வாரம்

#### டில்லி மாணவர் சங்க ஏற்பாடு

புதிய டில்லி மாணவர் சங்கத்தினர் சென்ற செப். 27-ந்தேதியிலிருந்து தாகூர் ஞாபகார்த்த வாரத்தைக் கொண்டாட ஏற்பாடு செய்துள்ளனர். கவி பிரேஷ்டரின் படத்துடன் கூடிய கொடிகள் விற்கப்பட்டு அதன் மூலம் கிடைக்கும் பணம் விஸ்வபாரதிக்கு அனுப்பப்படும்.

---

### சிவகங்கைச் செய்திகள்

#### புதிய எஸ்டேட் கலெக்டர்

சிவகங்கை எஸ்டேட்டுக்கு கோர்ட் ஆப் வார்ட்ஸாரால் நியமுகம் செய்யப்பட்ட ஸ்ரீ திவான்பஹதூர் V. பொன்னுச்சாமி பிள்ளை (ரிட்டயர்டு ஜில்லா கலெக்டர்) 1—9—41 முதல் எஸ்டேட் கலெக்டர் பதவிவகித்து வருகிறார்கள்.

#### உத்தியோக மாற்றம்

ஹெட்டாபீஸ் ஹெட்அக்கவுண்டண்ட் ஸ்ரீ K. கடேசய்யரை ஜெனரல் ஹெட் கிளார்க்காகவும், திருவேகம்பத்து தாசில்தார் ஸ்ரீ S குசைபிள்ளையை ஹெட்அக்கவுண்டெண்ட்டாகவும், சாக்கோட்டை உதவி தாசில்தார் ஸ்ரீ M. V. வேலுச்சாமித் தேவரை திருவேகம்பத்து தாசில்தாராகவும், வடவம்பட்டி உதவி தாசில்தார் ஸ்ரீ N. ராமஸ்வாமி ஐயரை காளையார் கோவில் தாசில்தாராகவும், காளையார் கோவில் தாசில்தாராயிருக்கும் ஸ்ரீ M. R. சுப்பிரமணிய அய்யரை திருவேகம்பத்து தாலூகா ஓவர்சியராகவும் பதவி வகிக்கும்படி உத்தரவாகி யிருக்கிறது.

# தமிழிசைக்குக் கெடுதல் செய்ய வேண்டாம்

## பிரபல வித்வான்கள் அறிக்கை

"சென்ற ஆகஸ்ட் மாதம், அண்ணாமலை யூனிவர்ஸிட்டியின் ஆதாவில் நடைபெற்ற தமிழிசை மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானங்களையும், அதற்குப் பிறகு பத்திரிகைகளில் நடைபெற்றுவரும், விவாதங்களையும், இது சம்பந்தமாக ஒரு சில கூட்டத்தில் நடைபெற்றுவரும் சர்ச்சைகளையும் நாங்கள் நன்கு கவனித்துவருகின்றோம். அண்ணாமலை யுனிவர்ஸிட்டியில் நடைபெற்ற தமிழிசை மகா நாட்டுத் தீர்மானங்கள் தமிழ் நாட்டினராலும் தமிழ்நாட்டிலுள்ள சங்கீத வித்வான்களாலும், அறிஞர்களாலும் பெரிதும் வரவேற்கத்தக்கதாகும். பெரும்பான்மையான தமிழ் மக்கள் வாழும் நாட்டில், தமிழ் மக்கள் வாழ்க்கையில், அனுபவத்தில் பழகிக் கொண்டிருக்கும் தமிழ் பாஷையில் பெரும்பாலான பாடல்கள் பாட வேண்டுமென்று சங்கீத வித்வான்களைச் கேட்டுக்கொள்வது வெகு நியாயமான கோரிக்கை. சந்தோஷமாக வித்வான்கள் வரவேற்கத் தக்கதாகும். எங்களுக்குத் தெரிந்த வரையில், தமிழ்ப் பாடல்களின் அபிவிருத்திக்கு நல்ல முறையில் தொண்டு செய்யவந்த தனிகர் ராஜா சர் அண்ணாமலை செட்டியாரவர்களே என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம். "தமிழில் இனிய கீர்த்தனைகள் இல்லை. வர்ணமில்லை, சுரஎழுத்தில்லை, சங்கீதத்திற்கு சாஹித்தியமும், மொழி உச்சரிப்பும் வேண்டுவதில்லை. தமிழில் பாடினால் பாவமும் பக்தியும் ஏற்படா; தமிழ் மொழி சங்கீதத்திற்கு இனிய மொழியில்லை" என்று சிலர் கூறும் வாதம் மகா அபசாரம் நிறைந்ததாகும். இக்கூற்றுகள் விவாதத்திற்கு நிற்கா. தமிழில் சங்கீதத்திற்குரிய எல்லாவித அனுகூலங்களும் இருக்கின்றன. காலமாறுதலுக்கேற்ப நாமும் நடந்து கொள்வது சங்கீத வித்வான்களின் முற்போக்கிற்கும் அபிவிருத்திக்கும் சங்கீத சீர்திருத்தத்திற்கும் மிக அவசியமானது. தெலுங்கு பாஷையிலோ, வேறு பாஷைகளிலோ முற்றிலும் பாடப்படாது என்று அண்ணாமலை யுனிவர்ஸிட்டியில் நிறைவேறிய தீர்மானங்களில் காணப்படவில்லை. ராஜா சர் நோக்கமும் அப்படியல்ல என்பது எங்கட்கு நன்கு தெரியும். அவர் சங்கீத மகாநாட்டிற்கு அனுப்பிய செய்தியில் இவ்விஷயங்களை நன்கு தெரியப்படுத்தியிருக்கிறார். அண்ணாமலை சர்வகலாசாலையில் தெலுங்கு, சம்ஸ்கிருதம், மலையாளம் முதலிய பாஷைகளில் கல்வியும், சங்கீதமும் சொல்லிக் கொடுக்கப்படுகின்றன. அண்ணாமலை சர்வகலாசாலையிலுள்ள சங்கீதப் பாடசாலையின் கட்டிட முகப்பில் தியாகய்யர், மகா வித்வான் வைத்தியநாத அய்யர் அவர்களின் உருவச்சிலைகளை வைத்துப் பூஜித்து அவர்களின் மேதைக்கு மரியாதை செய்யப்பட்டு வருகிறது. ராஜா சர் அவர்களும், மற்றுமுள்ள அறிஞர்களும் தமிழிசை வளர வேண்டும், என்று அபிப்பிராயப்பட்டால் அது மற்ற பாஷைப்பாடல்களை வேண்டாம் என்று சொல்லி விட்டதாக தப்பர்த்தப் படுத்திக் கொண்டு கிளர்ச்சி செய்வது தமிழ் நாட்டின் துரதிர்ஷ்டமேயாகும். சில குறுகிய நோக்கமுடையோர்கள் செய்யும் இக்கிளர்ச்சியினால் நல்ல சங்கீத வித்வான்களுக்கும், தமிழிசைக்கும், தமிழ் மொழிக்கும் கேடு செய்கிறார்கள் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். தமிழ் நாட்டின் அறிஞர்களும், சங்கீத வித்வான்களும், அபிமானிகளும், இந்த நல்ல சந்தர்ப்பத்தை உபயோகப்படுத்திக் கொண்டு வீண் கிளர்ச்சியை நிறுத்தி விட்டு தமிழ் பாடல்கள் பரவ நல்ல முறையில் பாடுபட்டு தமிழ் நாடெங்கெணும் தமிழ் பாடல்கள் ஒலிக்கச் செய்யும்படி பணிவாக கேட்டுக் கொள்ளுகிறோம்."

கீழ்க்கண்டவர்கள் இவ் வறிக்கையை வெளியிட்டுள்ளார்கள்:—

சங்கீத வித்வான் கே. எஸ் பொன்னையா பிள்ளை, திருவாவடுதுறை நாதசுர வித்வான் T. N. ராஜரத்தினம் பிள்ளை, மதுரை மாரியப்ப ஸ்வாமிகள், எம். எம். தண்டபாணி தேசிகர், புதுவை பாரதிதாஸன், சென்னை மேயர் ஜானகிராம் செட்டியார், எம். கே. தியாகராஜ பாகவதர் 'தினமணி' ஆசிரியர் டி. எஸ். சொக்கலிங்கம், ஸ்ரீமான் வ. ரா., வித்வான் T. P. மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை, எம். பக்தவத்ஸலம், கீவளூர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, K. C. சுப்ரமண்யஞ் செட்டியார் (பார்—அட். லா) டாக்டர் திருமூர்த்தி, ராவ்பகதூர் M. C. ராஜா, ஜனாப் அப்துல் ஹமீதகான், சாமி அருணகிரிநாதர், 'தாருல் இஸ்லாம்' ஆசிரியர், M. S. ராமஸாமி அய்யர், ராவ்பகதூர் P. சம்பந்த முதலியார் முதலியோர்.

இவ்வறிக்கையில் கண்டுள்ள அபிப்பிராயங்களை ஆமோதிக்கும் அறிஞர்கள் தங்கள் கையெழுத்தை கழகத்துக்கு அனுப்பி வைக்கும்படியும், தமிழ்பாடல்கள், தமிழ்ப் பாடகர்கள் ஆகியவற்றைத் தெரிவிக்கும்படியும், தமிழிசை அபிவிருத்தி சம்பந்தமாகத் தெரிவிக்கும் ஆலோசனைகள் வரவேற்கப்படும் என்றும் காரியதரிசி தமிழிசைக் கழகம் ராயப்பேட்டை, சென்னை அறிவிக்கிறார்.

## ரிசர்வ் பாங்கு மத்திய சபைக் கூட்டம்

ரிசர்வ் பாங்கின் மத்திய சபைக் கூட்டம் அக்டோபர் 6-ந் தேதி சென்னையில் நடக்கும். பொக்கிஷ இலாகா காரியதரிசி மிஸ்டர் வி. இ. ஜோன்ஸ் இம்மாதம் 5-ந் தேதி சென்னை வருவார்.







## ஸ்தலஸ்தாபன அங்கத்தினர்கள்

### பதவிக்காலம் நீடிக்கப்பட்டது

1942-ம் ஸ்ரீ ஏப்ரல் மீ 1உ வரை முனிசிபாலிட்டிகள், ஸ்தலஸ்தாபனங்கள் இவற்றின் அங்கத்தினர் பதவிக் காலத்தை நீடிக்கச் சென்னை சர்க்கார் கொண்டுவந்திருந்த மசோதாவுக்கு மே. த. கவர்னர் அங்கீகாரம் அளித்துவிட்டார். இதன்படி இவ் வருஷம் நவம்பர் முதல் தேதியிலிருந்து டிசம்பர் 31உக்குள் பல்வேறு தேதிகளில் நடக்கவேண்டிய புதிய அங்கத்தினர் தேர்தல் நிறுத்திவைக்கப்படும். இப்போது தயாராகி வரும் புதிய வாக்காளர்கள் ஜாபிதா குறிப்பிடப்பட்ட காலத்துக்குள் கிடைக்க இயலாததால் மேற்படி பதவிகளை நீடிக்கும்படி நேர்ந்ததாகக் கூறப்படுகிறது.

---

ஜெர்மன் தூதரான வான்பேபன் ஜெர்மனியிலிருந்து துருக்கிக்கு விமானமூலம் திரும்பிவந்துவிட்டதாக இஸ்தாம்புலில் இருந்து வந்த செய்தி யொன்று கூறுகிறது. அவர்தொரபியாவிலுள்ள ஜெர்மன் தூதர் கோடைக்கால வாஸஸ்தலத்தில் தங்கியிருப்பதாகத் தெரிகிறது.

## சர்வதேசத் தொழிலாளர் மகாநாடு

### தொழிலாளர் பிரதிநிதி தேர்ந்தெடுக்கப்படாததேன்?

அகில இந்தியத் தொழிலாளிகள் காங்கிரஸ் பொதுக் காரியதரிசி ஸ்ரீ என். எம். ஜோஷி (இந்திய சட்டசபை மெம்பர்) பத்திரிகைகளுக்கு வெளியிட்ட அறிக்கை யொன்றில் கூறுவதாவது:—

சர்வதேசத் தொழிலாளிகள் மகாநாட்டுக்கு யாரையும் தொழிலாளிகள் பிரதிநிதியாக அனுப்புவதில்லை என்று இந்திய சர்க்கார் முடிவு செய்திருப்பதாக குறிப்பிடப்பட்டுள்ள அறிக்கை தப்பெண்ணத்துக்கு இடம் கொடுக்கிறதென்றும் மேற்படி பிரதிநிதியைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் அகில இந்தியத் தொழிற் சங்கக் காங்கிரஸுக்கும் இந்திய சர்க்காருக்குமிடையே அபிப்பிராய பேதம் ஏற்பட்டதென்பதே சரியான காரணம் என்றும் அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

---

இந்திய சட்டசபை எமிக்கிரேஷன் நிரந்தரக் கமிட்டி ஸிம்லாவில் அக்டோபர் 4-ந் தேதி கூடும்.

## சென்னை ரேடியோ

ஒலி பரப்புகள்:— காலை 7-30 முதல் 9 வரை; பிற்பகல் 1-00 முதல் 3 வரை மாலை 4 முதல் இரவு 10-30 வரை.

தமிழில் செய்திகள்:— காலை 7-40 பிற்பகல் 2-00; இரவு 7-45.

### அக்டோபர் 2உ வியாழன்

2·10—2·40 ஆர். கே. ராமஸாமி பாட்டு
5·00—5·45 வி. பாலகிருஷ்ண பிள்ளை வயலின்
6·35—7·00 மருத்துவக்குடி ராஜகோபல ஐயர் பாட்டு
8·00—9·15 திருச்சியில் உள்ளபடி

### 3உ வெள்ளி

1·00—1·30, 7·10—7·25 ஸ்ரீமதி கே. வி. ஜானகி பாட்டு
5·00—5 45 ஸ்ரீமதி வி. சுப்புலக்ஷ்மி ஷை
6·05—6·30 வி. வி. விஸ்வநாதன் ஷை
6·30—7·00, 8,00—8·30 ஸ்ரீமதி லலிதா வெங்கட்ராம் வீணை, பாட்டு
8·30—8·45 ராதையின் காதல்—நாடகம்

### 4உ சனி

5·00—5·45, 6·30—7·00 ஸ்ரீமதி டி. சூர்யகுமாரி பாட்டு
6·05—6·30 டி. எல். ராமச்சந்திர பாகவதர் பாட்டு
8·00—9·00 பாருபள்ளி ராமகிருஷ்ணைய பந்துலு பாட்டு

### 5உ ஞாயிறு

5·00—5·45, 6·30—7·00 நோரி நாகபூஷணம் வயலின்
6·05—6·30, 8·30—9·00 ஸ்ரீமதி கோலார் ராஜம் பாட்டு
7·00—7·30 வாளாடி கிருஷ்ணய்யர் ஷை

### 6உ திங்கள்

1·00—1·30 ஆர். ஸ்ரீனிவாஸன் பாட்டு
1·35—2·00, 7·10—7·25 ஸ்ரீமதி வி. எஸ். ராஜம் பாட்டு
5·00—5·45, 6·30—7·00 ஸ்ரீமதி எஸ். டி. லக்ஷ்மி தேவம்மா பாட்டு
6·05—6·30, 10·10—10·30 தேவகோட்டை நாராயண ஐயங்கார் வீணை
7·00—7·10 யாமறிந்த மொழி: இளங்கோவின் நாடகமும், கம்பனின் காவியமும்
8·00—9·00 திருச்சியில் உள்ளபடி

### 7உ. செவ்வாய்

1·00—1·30 டி. குப்புராவ் க்ளாரினெட்
2·10—2·40 ஸ்ரீமதி கே. பார்வதி பாட்டு
5·00—5·45 ஸ்ரீமதிகள் சுவீலா, நாகமணி பாட்டு
6·05—6·35 டி. குப்புஸ்வாமி க்ளாரினெட்
6·45—7·00 முதல் தவறு முற்றிலும் தவறு—நாடகம்
8·00—9·00 டி. என். ராஜரத்னம் பிள்ளை பாட்டு

### 8உ. புதன்

1·00—1·30 பி. பாஷ்யம் நாயுடு வீணை
5·00—5·45, 6·30—7·00 ஆர். எஸ். லோகையா க்ளாரினெட்
6·05—6·30, 7·10—7·25 கே. ராகவன் பாட்டு
8·00—8·30 எஸ். ராஜம் ஷை

### 9உ. வியாழன்

1·00—1·30, 6·35—7·00 மாஸ்டர் ஸ்ரீ கண்டன் பாட்டு
2·10—2·40 ஆர். ராஜாராமன் ஷை
5·00—5·45 டி. ஆர். ரத்னவேலு முதலியார் ஷை
8·00—9·15 திருச்சியில் உள்ளபடி

## மைசூர் விமானப் பிரிவுக்கு மைசூர் சின்னம்

### செல்லுமிடமெல்லாம் ஜெயம் பெற்று வருக!

பிரிட்டனில் உள்ள மைசூர் சண்டை விமானப் பிரிவைச் சேர்ந்த விமானிகள் பயிற்சி முடிவதற்கு முன்னமே இரண்டு எதிரி விமானங்களை வீழ்த்தி விட்டார்களாம். அதன் பிறகு இன்னும் பல விமானங்களுக்கு வழி வைத்திருக்கிறார்களாம். அவர்கள் சீக்கிரத்திலேயே யானையையும் தூக்கிச் செல்லக்கூடிய இருதலை கொண்ட அகண்டபேரண்டப் பட்சி போட்ட சின்னத்தை அணியப் போவதாக டைம்ஸ் பத்திரிகை கூறுகிறது. இந்தச் சின்னங்கள் தற்போதுள்ள மைசூர் மகாராஜாவால் வழங்கப்படும். அவருடைய விருது கண்டபேரண்டமல்லவா?

இந்த மைசூர் விமானப் பிரிவுக்கு மைசூர் சமஸ்தானம் ஒரு லட்சம் பவுன் கொடுத்திருக்கிறது. லண்டனிலுள்ள மைசூர் வியாபாரக்கமிஷனர் காப்டன் எஸ். டி. பின்ஸ்டெட் சென்றமாதம் 17உ யன்று இப் பிரிவைப் பார்வையிட்டு, மகாராஜாவிடமிருந்து கிடைத்த வாழ்த்துத் தந்திச் செய்தியொன்றையும் வாசித்தார்.

சென்ற மகாயுத்தம் வெற்றிகரமாக முடிந்ததற் கடுத்தாற்போல் நான் பிறந்ததால் "ஜயம்" என்னும் வார்த்தை என் பெயருடன் சேர்க்கப்பட்டது. என்னுடைய விருதோ நாம் அறிந்த பட்சி வருக்கத்திலேயே மிகவும் பலம் வாய்ந்ததான கண்டபேரண்டம். உங்கள் போராட்டத்திலெல்லாம் நீங்கள் வாகை சூடி வரவேண்டுமென்று நான் கோருகிறேன். உங்களில் ஒவ்வொருவருக்கும் கண்டபேரண்டச் சின்னமொன்று அனுப்புகிறேன். என் பொருட்டு அதை அணிந்துகொள்ளும்படிக் கேட்டுக் கொள்ளுகிறேன்." என்று அந்தச்செய்தியில்கண்டிருந்தது.

### பழைய ஸ்டாம்புகளுக்கு ஒரு தீவு இனும்!

உபயோகப்படுத்திய பழகிய ஸ்டாம்புகளைச் சேகரிப்பதை 12,000,000 அமெரிக்கர்கள் தங்கள் கொள்கையாகக் கொண்டுள்ளார்கள். இவர்கள் இதற்கென்று வருஷத்திற்கு இரண்டு கோடி டாலர்கள் செலவு செய்கிறார்கள். இவர்களுக்கு இது ஒரு வேடிக்கையாகவும் ஒரு வியாபாரமாகவும் இருக்கிறது. சமீபத்தில் நியூயார்க்கில் வெளியான பத்திரிகை யொன்றில் பின்கண்டவாறு விளம்பரம் செய்யப்பட்டிருந்தது:

'ஒரு அழகான தீவு. தென் கரையிலுள்ளது. அதன் பெயர் மஸாசுஸெட்ஸ். வட அமெரிக்க ஸ்டாம்புகளுக்குப் பதிலாகக் கொடுக்க உத்தேசம்''

யுனைடெட் ஸ்டேட்ஸில் நிபுணர்கள் கணக்குப்படி 15 பேர்கள் வட அமெரிக்க ஸ்டாம்புகள் சேகரித்துள்ளார்களாம். தனித்தனியாக ஒவ்வொருவரும் 10 லட்சம் டாலர் பெறுமான ஸ்டாம்புகள் சேகரித்திருப்பதாக அந்தப் பத்திரிகை தெரிவிக்கிறது.

## ரேடியோ நிகழ்ச்சிகளில் சில மாறுதல்கள்

அக்டோபர் மாதத்திலிருந்து சென்னை, திருச்சி நிலைய நிகழ்ச்சி நேர விவரங்களில் சில மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. முக்கியமாக திருச்சி கிராம நிகழ்ச்சிகள் மாலை 6-30-க்குப் பதிலாக 6-05-க்கே ஆரம்பமாகி விடுகின்றன. மழைகாலத்தில் சீக்கிரம் இருட்டிவிடும் நாட்களில் இம் மாறுதல் கிராமவாசிகளுக்கு உபயோகமாக இருக்கும் எனத் திருச்சி நிலயத்தார் கருதுகின்றனர்.

மாலைச் செய்தி அறிக்கைகளிலும் ஒரு மாறுதல். சென்னையில் தெலுங்குச் செய்தியறிக்கை 7-20க்குப் பதிலாக 7-30க்கும், சென்னை மத்திய நிலையிலும், திருச்சியிலும் தமிழ்ச் செய்தி யறிக்கை 7-35க்குப் பதிலாக 7-45க்கும் ஒலிபரப்ப படுகின்றன. தமிழ்ச் செய்தியறிக்கை சென்னை நிலைய சிற்றலையில் (மதராஸ் 2) கிடையாது.

சென்னை 2வது ஒலிபரப்புக்கு இன்னும் அரை மணி நேரம் அதிகம் சேர்க்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது ஒலிபரப்பு பிற்பகல் 1 மணிக்கே ஆரம்பமாகும்.



## திருச்சி ரேடியோ

ஒலி பரப்புகள்:— காலை 7-30 முதல் 9 வரை; பிற்பகல் 1 முதல் 3 வரை மாலை 4 முதல் 10 வரை.

தமிழில் செய்திகள்:— காலை 7-40 பிற்பகல் 2-00; இரவு 7-45.

### அக்டோபர் 2உ வியாழன்

1·35—2·00 எஸ். எல். மீனாக்ஷி சுந்தரம் பாட்டு
5·00—5·45, 6·30—7·00 செம்பை வை. சுப்ரமண்ய பாகவதர் பாட்டு
8·00—9·20 திருப்பாம்பரம் என். [illegible] நாத பிள்ளை புல்லாங்குழல் மைசூர் டி. குருராஜப்பா [illegible] வின், உமையாள்புரம் [illegible] கணேசய்யர் மிருதங்கம்

### 3உ வெள்ளி

1·35—2·00 ஸ்ரீமதி லலிதபாய்-சாமண்ணா வீணை, பாட்டு
5·00—5·15, 8·45—9·20 திருநெல்வேலி சுந்தர [illegible] வா மூர்த்திகள் பாட்டு
6·30—7·00, 8·00—8·30 திருவீழிமிழலை எஸ். [illegible] வித்த ராஜு சகோதரர்கள் நாதசுரம்

### 4உ சனி

1·00—1·30, 2·05—2·30 ஏ. டி. பி. சுந்தரம், [illegible] கோவிந்தன் பாட்டு
7·15—7·30 தானவாத்தியக் கச்சேரி
8·00—9·00 சென்னையில் உள்ளபடி

### 5உ ஞாயிறு

1·35—2·00, 5·00—5·45 எம். எஸ். சந்திர சேகர ஐயர் பாட்டு
2·05—2·30, 6·30—7·00 காஞ்சிபுரம் ஸ்ரீமதி டி. ராமதிலகம் பாட்டு
8·00—9·10 கே. எஸ். நாராயணய்யங்கார் கோட்டு வாத்ய வீணை

### 6உ திங்கள்

1·35—2·00, 6·30—7·00 சுகாம் வி. சுந்தரம் பாட்டு
5·00—5·45 பி. ஆர். எஸ். மணி புல்லாங்குழல்
8·00—9·20 சாத்தூர் எஸ். கிருஷ்ணய்யங்கார் பாட்டு, மைசூர் [illegible] குருராஜப்பா வயலின், திருக்கோகர்ணம் ஏ. மீனாக்ஷி சுந்தரம் மிருதங்கம்

### 7உ செவ்வாய்

1·35—2·00, 5 00—5·45 டி. ஆர். கிருஷ்ணமாச்சாரி வீணை
6 30—7·00 ரேடியோ வாத்ய கோஷ்டி
8·00—9·00 சென்னையில் உள்ளபடி

### 8உ புதன்

1·35—2·00 ஸ்ரீமதி பி. எம். [illegible] அம்மா பாட்டு
5 00—5·45, 8·00—8·45 மன்னார்குடி கே. [illegible] அம்மாள் கோட்டு வாத்யம், பாட்டு
6 30—7·00, 8·45—9·20 திருவாளப்புத்தூர் கே. கிருஷ்ணமூர்த்தி பிள்ளை வயலின்

### 9உ வியாழன்

1·35—2·00 எஸ். கே. ஜகந்நாதன் பாட்டு
5·00—5·45, 6·30—7·00 விளாத்திகுளம் [illegible] சுவாமி பாண்டியன் பாட்டு
8·00—9·20 காரைக்குடி சாம்பசிவய்யர் வீணை

# அமெரிக்கர் கேள்விகளுக்கு அமெரி பதில்

## பண்டித ஜவஹரைச் சிறையிலிட்டது ராஜீய சம்பந்தமல்ல

சென்ற திங்களன்று சில அமெரிக்கர் கேட்ட ஐந்து கேள்விகளுக்கு லண்டன் ரேடியோ மூலம் இந்தியா மந்திரி மிஸ்டர் அமெரி பதிலுரைத்தார். அவை வருமாறு:-

கேள்வி:-பிரிட்டிஷ் சர்க்காருக்கு நேரடியாகவோ, மறைமுகமாகவோ இந்தியா செலுத்தும் வரிகள் யாவை?

பதில்:—பிரிட்டிஷ் சர்க்காருக்கு இந்தியாவோ பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த வேறு எந்த பாகமோ எம்முறையிலும் வரி செலுத்தவில்லை. இந்தியாவின் வருமானமெல்லாம் அந்நாட்டின் [illegible] தவிர, இந்திய ராணுவ சம்பளங்களுக்காக லக்ஷக்கணக்கான டாலர்களை பிரிட்டிஷ் சர்க்கார் கொடுத்துதவுகிறார்கள்.

கேள்வி:-இந்திய வைஸ்ராய் இந்திய ஜனங்களைக் கேட்காமலேயே ஜெர்மனியுடன் யுத்தம் தொடுப்பதாக அறிக்கை வெளியிட்டது உண்மையா? அது ஜனநாயகமாகுமா?

பதில்:—வைஸ்ராய் யுத்த அறிக்கை வெளியிடவுமில்லை, அதை வெளியிட்டிருக்கவும் முடியாது. யுனைடெட்ஸ்டேட்ஸ் யுத்தம் தொடுத்தால், அதே சமயத்தில் ஒஹியோவும் போர் தொடுத்ததாக அர்த்தமல்லவா? அதே போல பிரிட்டிஷ் சர்க்கார் யுத்தம் தொடுத்தால் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலுள்ள மற்றெல்லா பாகங்களும் போர் தொடுத்தது போன்ற நிலைமையே சமீபகாலம்வரை இருந்து வந்தது. 1914-ம் ஆண்டில் கானடா[illegible] [illegible] 1939-ம் வருஷத்தில் அரசியல் சட்டத்தின்படி இந்தியாவின் நிலையும் இதுவே; எனினும் வைஸ்ராயும், கவர்னர்களும் இந்திய ராஜீயத் தலைவர்களுக்கு விஷயங்களைத் தெரிவிக்க தங்களாலான வரை முயன்று வந்திருக்கிறார்கள்.

கேள்வி:—பிரிட்டன் ஏன் இப்போதே இந்தியாவுக்கு குடியேற்ற நாட்டந்தஸ்து அளிக்கவில்லை? அளிக்கும் உத்தேசம் உண்டா? உண்டானால் எப்போது?

பதில்:—1935-ம் வருஷத்திய சட்டப்படி இந்தியாவுக்கு ஒரு சமஷ்டி அரசியல் வழங்கப்பட்டது. இதன்படி 11 மாகாணங்களுக்கு சுய நிர்ணய உரிமை கிடைத்தது. இப்போது 4 மாகாணங்களில் இத்தகைய ஜனநாயக ஆட்சி நடந்து வருகிறது. மற்ற ஏழு மாகாணங்களிலுள்ள காங்கிரஸ் மந்திரி சபைகள் ராஜிநாமாச் செய்துவிட்டன. [illegible] அந்த மாகாணங்களில் கவர்னர் ஆட்சி நடந்து வருகிறது. சமஷ்டிப் பகுதி அமுலுக்கு வந்திருந்தால் காலக் கிரமத்தில் பூர்ண குடியேற்ற நாட்டந்தஸ்துக்கு வழியேற்பட்டிருக்கும். ஆனால் முக்கியத் தரப்பினர் சமஷ்டித் திட்டத்தை எதிர்த்தனர். உயிருக்கே போராடி வரும் இந்நிலையில் வேறு செய்வதற்கில்லை. இந்தியாவின் எதிர்கால அரசியல் இந்தியர் கையிலேயே இருக்கிறது.

கேள்வி:—பண்டித நேருவைச் சிறையிலடைத்திருப்பது இந்திய சுயாட்சிக்கு வழிதேடுவதே தங்கள் கொள்கை என்பதற்கு பொருத்தமானதா?

பதில்:—பண்டித நேரு யுத்த முயற்சியைத் தடுக்கத்தக்க மிக்க ஆத்திரமூட்டும்படியான பிரசங்கங்கள் செய்ததற்காகச் சிறைவாசத் தண்டனை விதிக்கப்பட்டார். அவரது தண்டனை சட்டப்படிக் கோர்ட்டால் விதிக்கப்பட்டதேயன்றி நிர்வாக அதிகாரிகளால் விதிக்கப்படவில்லை.

கேள்வி:—தற்காப்பு யுத்த முஸ்தீப்பினால் இந்தியாவின் மனோபாவத்தில் ஏற்பட்ட மாறுதல் என்ன?

பதில்:—நாஜிக்கொடுமை அதிகரித்து வருவதையும், யுத்தம் இந்தியாவை நெருங்கிவருவதையும் கண்டு நமது கட்சிக்கு [illegible] வெற்றி ஏற்பட வேண்டுமென்று அவர்கள் விரும்பிவருகிறார்கள்! இதற்காக உருவான ஆதரவளிக்கப் படுகின்றது. யுத்த ஆரம்பத்தில் 2 லக்ஷம் பேர் கொண்ட இந்திய ராணுவம் தற்போது $7\frac{1}{2}$ லக்ஷமாக இருக்கிறது. ராணுவத்தில் சேர்ந்த ஒவ்வொரு இந்தியரும் தாங்களாகச் சேர்ந்தவர்களே. மத்தியக் கிழக்குப் பகுதியில் இந்தியத் துருப்புகள் மிக்க வீரமாகப் போராடியிருக்கின்றன. இந்திய கடல்படையும், விமானப்படையும் தங்களது வேலைகளைச் சிறக்க நடத்திவருகின்றன. யுத்தத்திற்கான எல்லா சாமான்களையும் செய்ய ஏராளமான தொழிற்சாலைகள் ஏற்பட்டிருக்கின்றன.

—



## யுத்தச் செய்திகள்

ஹிட்லர் தன் கூட்டாளிகளுக்கு படைகள் அனுப்பும்படி ஆக்ஞாபித்திருக்கிறார். இத்தாலி 5 லக்ஷம், ஹங்கேரி $1\frac{1}{2}$ லக்ஷம் ருமேனியா ஒரு லக்ஷம், ஸ்லோவேகியா ஒரு லக்ஷம் துருப்புகள் அனுப்பும்படி கோரப்பட்டிருக்கின்றனவாம். மழைக்காலத்தில் மேல் குறித்த துருப்புகளை ரஷ்யப் போர் முனைக்கு அனுப்பி, அவர்களுக்குப் பதிலாக வயதான ஜெர்மன் சோல்ஜர்களை ஜெர்மன் தொழிற்சாலைகளில் வேலை செய்யும்படி செய்ய ஹிட்லர் நினைத்திருக்கிறாராம்.

லெனின்கிராட் நகரை ஜெர்மானியர் கைப்பற்ற விடாமல் ரஷ்யர் பலமாக எதிர்த்து வருகின்றனர். ஒவ்வொரு நாளும் எதிர்ப்பு அதிகரித்துக்கொண்டு வருகிறது. லெனின்கிராடைச் சுற்றியுள்ள கிராமங்களில் பத்து கிராமங்களுக்கு மேல் ரஷ்யர் வசமாக்கிக்கொண்டிருக்கின்றனர். நகர வாயிலின் பல இடங்களில் ஜெர்மானியருக்கும், ரஷ்யருக்கும் கைகலந்த சண்டை பலமாக நடைபெற்று வருகிறது. துப்பாக்கிச் சனியன்களால் ரஷ்யர் பலமாக எதிர்க்கவே ஒன்றிரண்டு இடங்களில் ஜெர்மனியர் ஐந்தாறு மைல்கள் வரை பின் வாங்க நேர்ந்ததாகவும் ஒரு ரஷ்யச் செய்தி கூறுகிறது. இச்சண்டையில் கவசந் தரித்த ரெயில் வண்டிகளும், டாங்குகளும் ரஷ்யருக்கு அதிக பலனை அளித்து வருகின்றன. இதைத் தவிர இரவு நேரங்களில் ரஷ்யர்கள் பதுங்கித் தாக்குவதால் ஜெர்மன் சேனைக்கு ஏராளமான சேதம் ஏற்பட்டிருக்கின்றதாம். இந்நகர்முன் இதுவரையில் ஜெர்மனியர் இழந்த சோல்ஜர்களின் மதிப்பு நான்கு லக்ஷத்துக்கு மேல் இருக்குமாம். புது மாதிரியான ஜெர்மன் குண்டெறியும் விமானங்கள் எண்பது நூறு என்று லெனின்கிராடைத் தாக்கி வருகின்றன. ஒரு நாளுக்கு 22 தடவை இம்மாதிரி படையெடுப்பு நிகழ்கிறதாம். ரஷ்யரும் சளைக்காமல் அவைகளைச் சுட்டு வீழ்த்திய வண்ணமிருக்கின்றனர்.

ஒடிஸ்ஸா போர்முனையிலும் ஜெர்மானியருக்குக் கடும் எதிர்ப்பு இருந்துவருகிறது. கிரிமியா தீபகற்பத்தை 70,000 நாஜிகள் தாக்கி வருகின்றனர். நீபர் நதியின் கிழக்கேயிருந்து தாக்குதல் நடைபெற்று வருகிறது.

பிரிட்டன், ரஷ்யா, யுனைடெட் ஸ்டேட்ஸ் இவற்றின் பிரதிநிதிகள் அடங்கிய மாஸ்கோ மகாநாடு சென்ற செப். 29ந்தேதி மாஸ்கோவில் நடந்தது. சோவியத் அந்நிய நாட்டு மந்திரி மிஸ்டர் மாலடவ் தலைமை வகித்தார். மகாநாடு கலைந்தவுடன் வெளியான அறிக்கை:—

ராணுவம், கடற்படை, விமானப்படை போக்குவரத்து, மூலப்பொருள்கள், வைத்திய சாதனங்கள் இவை சம்பந்தமாக ஆராயும் பொருட்டு ஆறு கமிட்டிகள் நியமிக்கப்பட்டன. அக்கமிட்டிகள் உடனேயே வேலை செய்ய ஆரம்பித்து அடுத்த வெள்ளியன்று தங்களது யாதாஸ்துகளைச் சமர்ப்பிக்கும்.

இந்திய சேனாதிபதி ஜெனரல் வேவல் லண்டனிலிருந்து டெஹ்ரானுக்கு விமான மூலம் சென்ற சனிக்கிழமை வந்து சேர்ந்தார். அவர் காகஸஸ் பாதுகாப்பு பற்றியும் வேறு பல விஷயங்களைப்பற்றியும் ரஷ்யருடன் விவாதித்தார். இரானிலுள்ள பெரிய எண்ணெய்க் கிணறுகளை பாதுகாப்பதற்கான கூட்டுமுறை விஷயமாக விவாதித்து வருவதாகத் தெரிகிறது. இந்தியாவிலிருந்து வந்த சணலும், பருத்தியும் ரஷ்யாவுக்கு அனுப்பப்பட்டுவிட்டன.

ஏராளமான சோவியத் துருப்புகள் ஸைபீரியாவை நோக்கிச் சென்றுகொண்டிருக்கின்றன. மாஸ்கோவிலிருந்து விளாடிவாஸ்டாக் வந்து சேர்ந்த அமெரிக்க உபாத்தியாயர் ஒருவர் தான் வழி நெடுக சோவியத் துருப்புகளைக் கொண்ட ரெயில் வண்டிகள் சாரியாகப் போவதைப் பார்த்ததாகத் தெரிவித்தார். சமீபத்தில் ரஷ்ய-ஜப்பான் யுத்தம் மூளக்கூடும் என்பதாக பல ஹேஷ்யங்கள் இருந்து வருகின்றன.

—

### இலங்கையில் பெட்ரோல் இறக்குமதி

ஜூலை, ஆகஸ்ட் மாதங்களை விட இப்பொழுது பெட்ரோல் எண்ணெய் இலங்கைக்கு அதிகமாக இறக்குமதி ஆகியிருக்கிறதென்றும், சென்ற மூன்றுவாரங்களுக்குள் மாத்திரம் சுமார் 6,00,000 காலன் பெட்ரோல் வகைகள் இறக்குமதியாகியிருக்கின்றன என்றும் தெரிய வருகிறது.

—

### மத்திய மாகாணத்தில் சிறை புகுந்தவர் 1033 பேர்

21 எம். எல். ஏக்கள் இப்போது மத்திய மாகாணச் சிறைகளிலிருக்கிறார்கள். இவர்களில் 17பேர் சத்யாக்ரகக் கைதிகள். 4 பேர் பாதுகாப்பு சட்டப்படி தண்டிக்கப்பட்டவர்கள். சத்தியாக்கிரகத்துக்காக அம்மாகாணத்தில் இதுவரையில் 1033 பேர் தண்டிக்கப்பட்டிருக்கிறார்கள். இவர்களில் 357 பேர் இப்போது சிறையிலிருக்கிறார்கள்.

Edited, Printed and Published by S MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi (S. INDIA).

